ஸ்ரீ:

ஷோலாப்பூர் மகாநகரத்தில் லக்ஷ்மீநாராயண மந்திரத்தில் புதிதாகத்
தோன்றியுள்ள ராமாநுஜதயாபாத்ரத் தனியன் விவாதத்தில்
உண்மை யுணரவிரும்பிய அவ்விடத்து பக்த பாகவதர்
களின் விருப்பத்தை நிறைவேற்றுகைக்காகவும்,
புஷ்கரம் பண்டித தாமோதராசாரி, வித்யார்த்தி,
த்வாரகாப்ரஸாத் முதலான சிலரால் வெளி
யிடப்பட்ட வீணன ஆசார்ய தூஷணங்களை
அகற்றுகைக்காகவும்

**ஸ்ரீகாஞ்சி. அண்ணங்கராசார்ய ஸ்வாமிகளால்**

எழுதப்பட்ட

# ராமாநுஜதயாபாத்ர பத்ய சரித்திரம்

இது
சென்னை ரத்னம் பிரஸ் பிராஞ்சில்
ஷோலாப்பூர் பக்தர்களால் அச்சிடுவிக்கப்பட்டது.

**இதன் விலை 1—0—0**

கிடைக்குமிடம்:
**க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்.**

இதற்குச் சரியாக வடமொழியிலும் ஆங்கிலத்திலும் எழுதப்பட்ட
புத்தகங்களும் காணத்தக்கன.

1 - 1 - 1954

T. C. A. Venkatesan

ஸ்ரீ:

ஷோலாப்பூர் மகாநகரத்தில் லக்ஷ்மீநாராயண மந்திரத்தில் புதிதாகத்
தோன்றியுள்ள ராமாநுஜதயாபாத்ரத் தனியன் விவாதத்தில்
உண்மை யுணரவிரும்பிய அவ்விடத்து பக்த பாகவதர்
களின் விருப்பத்தை நிறைவேற்றுகைக்காகவும்,
புஷ்கரம் பண்டித. தாமோதராசாரி, வித்யார்த்தி.
த்வாரகாப்ரஸாத் முதலான சிலரால் வெளி
யிடப்பட்ட விஞன ஆசார்ய தூஷணங்களை
அகற்றுகைக்காகவும்

**ஸ்ரீகாஞ்சி. அண்ணங்கராசார்ய ஸ்வாமிகளால்**

எழுதப்பட்ட

# ராமாநுஜதயாபாத்ர பத்ய சரித்திரம்

இது
சென்னை ரத்னம் பிரஸ் பிராஞ்சில்
ஷோலாப்பூர் பக்தர்களால் அச்சிடுவிக்கப்பட்டது.

**இதன் விலை 1—0—0**

கிடைக்குமிடம் :
**க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்.**

இதற்குச் சரியாக வடமொழியிலும் ஆங்கிலத்திலும் எழுதப்பட்ட
புத்தகங்களும் காணத்தக்கன.

**1 - 1 - 1954**

ஸ்ரீ:

# முன்னறிக்கை.

உலகத்தில் எப்படிப்பட்ட புத்தகம் வெளிவந்தாலும் அதைப் பூர்த்தியாகப் படித்துப் பார்ப்பவர்கள் மிகச்சிலரே. முதலில் கொஞ்சம், இடையில் கொஞ்சம், முடிவில்கொஞ்சம் பார்த்து விட்டு, ஒருபத்து நிமிஷத்திற்குள் ஏடுகளைத் தள்ளிவிட்டு உள்ளே வைத்துவிடுவதுதான் பெரும் பான்மையான உலக வழக்கம். எதுகிடைத்தாலும் பூர்த்தியாகப் பார்த்துவிட்டே வைப்பதென்பது சிலருடைய வழக்கம். அடியேனெழுதும் புத்தகங்களைப் பெரும் பாலும் பூர்த்தியாகப் பார்ப்பதும் பன்முறை பார்ப்பதுமே வழக்கமென்று விவேகிகளும் ரஸிகர்களுமான பலபெரியார்கள் எழுத்து மூலமாகவும் வாக்குமூலமாகவும் அடிக்கடி தெரிவிப்பதுண்டு. ஆகவே இப்புத்தகத்தை யாவரும் பூர்த்தியாக வாசிக்க வேணுமென்று யான் தெரிவிப்பது மிகையாகும்.

இந்நூலில் ஒவ்வொரு பாராவும் (அல்லது ஒவ்வொருவரியும்) எழுதும் போது "யதார்த்தவாதீ பஹுஜநத்வேஷீ" என்னும் பழமொழியை நினைத்துக்கொண்டேயிருக்க நேர்ந்தது. * सत्यं ब्रूयात् प्रियं ब्रूयात् न ब्रूयात्सत्यमप्रियम्— ஸத்யம் ப்ரூயாத் ப்ரியம் ப்ரூயாத் ந ப்ரூயாத் ஸத்யமப்ரியம்* என்பது தெரிந்தும் இதை யான் எழுதியது ஏன்? என்பதைப்பற்றிச் சிறிது விஜ்ஞாபிக்கிறேன். 1938 ஆம் வருஷத்தில் காஞ்சீபுரத்தில் தூப்புலில் பரகாலமடத்தில் "ராமாநுஜ தயாபாத்ரமஹோத்ஸவம்" என்று ஒரு கொண்டாட்டம் நடத்தினார்கள். ராமாநுஜ தயாபாத்ரத் தனியன் தோன்றி 600 ஆண்டுகள் நிரம்பி விட்டதாக வைத்து அக்கொண்டாட்டம் நிகழ்த்தப்பட்டது. உண்மையில் 200 ஆண்டுகள்கூட நிரம்பப்பெறாத இத்தனியனுக்கு 600 ஆண்டுகள் நிரம்பினதாக வைத்து ஒருவிழா நடத்துவது மிகவும் அநுசிதம் என்று எனக்குத் தோன்றினபடியால் அப்போதே ராமாநுஜதயாபாத்ரதத்வம் என்றும் பாத்ரதத்வ ஜயத்வஜம் என்றும் பாத்ர தத்வபரமார்த்தம் என்றும், மூன்று புத்தகங்களை அச்சிட்டு வெளியிட்டேன். இவற்றுள் முதல்புத்தகம் வெளியிட்டபின் அதற்கு பதிலாகச்சிலர் துண்டுப் பிரசுரங்கள் வெளியிட, அவற்றுக்கு விடையாகவும் பரிபூரண ஆராய்ச்சியாகவும் அடுத்த இரண்டு புத்தகங்களை வெளியிட்டேன். அவ்வளவோடு சாந்தமாய் விட்டது. பதினைந்து வருஷங்களுமாய்விட்டன.

இப்போது இந்நூல் எழுதநேர்ந்த ப்ரமேயத்தை உள்ளபடி தெரிவிக்கிறேன். நமது தென்னாட்டில் இந்த விவாதங்கள் அனேகமாக சாந்தமாய்விட்டனவென்றே சொல்லலாம். சிலமாதங்களாக இந்த விவாதம் வடஇந்தியாவில் அங்குரித்து முற்றியும் வருகிறது. ஷோலாபூர் என்று

ப்ரஸித்தமான நகரத்தில் லக்ஷ்மீநாராயணன் ஸந்நிதி அறுபது எழுபது வருஷகாலமாக விளங்கிவருகின்றது. அது தென்கலைக் கோவில். அதில் வடகலைஸேட்டுகளும் கைங்கரியங்கள் செய்திருக்கிறார்கள் செய்தும்வருகிறார்கள். அங்குள்ள உத்தராதி ஸ்ரீவைஷ்ணவர்கள் தென்கலை வடகலை யிருவகுப்பினரும் திவ்யப்ரபந்தங்களில் உபயுக்தங்களான நூறு பாசுரங்களை நன்ருகக் கற்று கர்ணச்ராவ்வியமாக தினப்படியாய் காலை மாலைகளில் ஸேவாகாலம் செய்துவருகிறார்கள். எனக்குத் தெரிந்து முப்பது வருஷங்களுக்கு மேலாக இது நடந்து வருகிறது. இருவகுப்பினரும் ஸ்ரீசைலேச தயாபாத்ரத்தனியனையே சொல்லித் தொடங்குவதும் மணவாள மாமுனிகளின்வாழி திருநாமத்தையே சொல்லிச் சாத்துமுறை செய்வதுமாக நடந்து வருகிறது. தேசிகன் திருநக்ஷத்ரங்களில் ஸ்ரீமாந்வேங்கடநாதார்ய தனியன் சொல்லுவதுண்டென்று கேள்விப்பட்டிருக்கிறேன். இருவகுப்பினருக்கும் ஒருவைஷம்யமு மில்லாமல் ஆச்சரியமான ஸமரஸப்பான்மையோடு நடந்து வரும் இந்நிகழ்ச்சியில், தென்னாட்டிலிருந்து அங்கு ஜீவநார்த்தமாகச் சென்ற சில வடகலைவகுப்பினர் அங்குள்ள வடகலை ஸேட்டுகளுக்கு கலாபேத ப்ரயுக்த வைஷம்யங்களை போதித்து மாச்சரியத்தை நெஞ்சிலே ஊன்ற வைத்து அங்கும் ராமாநுஜ தயாபாத்ரச் சண்டையைக் கிளப்பிவிட்டார்கள். தற்காலம் ஷெ ஸன்னிதியின் நிலைமை மிகவும் ரஸாபாஸமாக இருக்கின்றது.

இரண்டு மாதங்களுக்கு முன்பு ஷெ ஷோலாபூரிலுள்ள சில பக்தர்கள் கூடி (ஹிந்திபாஷையில்) ஒரு ப்ரார்த்தநாபத்ரிகை அச்சிட்டுப் பல மஹான்களுக்கு ரிஜிஸ்டர் செய்தனுப்பி விடை விரும்பியிருந்தார்கள். அதில், அந்த ஸன்னிதியின் பழைய ஆசாரத்தையும் புதிய கிளர்ச்சியையும் குறிப்பிட்டு தங்களைத் தெளிவு பெறுத்த வேணு மென்று விநயமுடன் விரும்பி யிருந்தார்கள். அதற்கு மறுப்பாக புஷ்கரத்திலிருந்து பண்டித தாமோதராசாரி பெயராலும், அவ்விடத்து ஸம்ஸ்க்ருமஹா வித்யாலய வித்யார்த்தி பெயராலும் பிள்ளைலோகாசாரியர் முதலிய பூர்வா சாரியர்களின் தூஷணைகள் மலிந்த இரண்டு பத்ரிகையை யச்சிட்டு வெளியிட்டார்கள். இப்படியாக இப்போது வடஇந்தியாவில் வீணான கிளர்ச்சிகள் தோன்றி வரம்பு மீறிச் செல்லுகின்றன.

ராமாநுஜ தயாபாத்ரத் தனியனுடைய உண்மைச் சரித்திரத்தை உள்ளபடி தெரிவிக்கவேணு மென்று ஷோலாபூர் பக்தர்கள் கேட்டுக் கொண்டதனால் ராமாநுஜ தயாபாத்ரபத்ய சரித்திரமென்று ஸம்ஸ்க்ருத பாஷையில் எழுதினேன். அது ஆங்கிலபாஷையில் இருந்தால் உலகுக்கு மிகவும் பயன்படுமென்று பல ஆப்தர்கள் அபிப்பிராயப் பட்டதனால் ஆங்கிலப் புலவர்களைக்கொண்டு மொழி பெயர்ப்பிப் பதற்காகத் தமிழிலும் எழுத நேர்ந்தது. இதை வாசித்துப் பார்த்த நண்பர்கள் இதுவும் அச்சிடப்பட்டு வெளிவர வேணு மென்று விரும்பவே இது அச்சிடலாயிற்று. இதன் ஆங்கில மொழிபெயர்ப்பும் அச்சிடலாயிற்று. ஸம்ஸ்க்ருத

பாஷையிலெழுதின முதனூலும் அச்சாகி வெளிவந்திருக்கிறது. இனி ஹிந்தீ பாஷையிலும் தெலுங்கு பாஷையிலும் மொழிபெயர்ப்பு வெளிவரும். இப்புத்தகங்களெல்லாவற்றிலும் விஷயநிரூபணம் ஒரேவிதமே.

## —இதில் நிரூபிக்கப்பட்டுள்ள ஸாரமான விஷயங்களாவன;—

விஷ்ணுவாலயங்களில் சுமார் 1300 வருஷகாலமாக திவ்யப்ரபந்த ஸேவை நடந்துவருகிறது, ஆதியில் ஆழ்வார்களின் தனியன்கள் மாத்திரமிருந்து, பிறகு *லக்ஷ்மீநாதஸமாரம்பாம் முதலாக நான்கு தனியன்களேற்பட்டது. மணவாளமாமுனிகளுக்கு ஸ்ரீரங்கநாதன்சிஷ்யனுகி ஸ்ரீசைலேச தயாபாத்ரத்தனியனருளினன்; பின்னர் வாழித்திருநாமம் தோன்றியது. தென்கலையாகிய திவ்யப்ரபந்தங்களுக்குத் தென்கலையாரே உற்றவர்கள்; வடகலையார்கள் திவ்யப்ரபந்தங்களை பாஷாந்தரமென்று ஒதுக்கினவர்கள். வடகலையாருக்கு திவ்யப்ரபந்தங்களில் மாத்திரமே வெறுப்பல்ல; அவற்றை இயற்றினவர்களான ஆழ்வார்களிடத்திலும் அவ்வாழ்வார்கள் போற்றின திவ்ய தேசங்களிலுங்கூட அவர்கள் விமுகர்களாயிருந்தனர். ஆழ்வார்களுள் கீழ்ஜாதியில் பிறந்தவர்கள் பிராதான்யம்வஹிக்கிறார்களென்பதே இவ்வளவுக்கும் காரணமாம். இப்போது சிலதிவ்யதேசங்களில் வடகலையார் திவ்யப்ரபந்தாபிமானம் காட்டிவருவது கோவில்களில் தனியன் விவாதம் முற்றினபின்பே. ராமாநுஜதயாபாத்ரத்தனியன் கோவில்களில் சண்டைக்காகவே புதிதாக ஸ்ருஷ்டிக்கப்பட்டு எங்கும் தடைபட்டேவருகிறது. தடையுத்தரவைமீறிச் சொன்னவர்கள் பலவகை ராஜதண்டனைக்கு உட்பட்டார்கள். அரசாணிபாலை வேங்கடாத்வரி இயற்றிய விச்வகுணாதர்சநூலினால் வடகலையார்கள் நீண்டகாலமாகத் தமிழ்வேதத்தை விட்டு விலகினவர்களென்று விளங்குகிறது. இப்போது வடகலையார்கள் சில திவ்யதேசங்களில் தலைமைவஹித்திருக்கிறார்களல்லவா? அந்த திவ்ய தேசங்களைப்பற்றியும் மேற்படி விச்வகுணாதர்சத்தில் ப்ரசம்ஸையிருக்கிறது. ஆனால் அங்கு வடகலையார்களைப்பற்றின ப்ரஸ்தாவம் ஒருவிதமாகவும் செய்யப்பட்டிருக்கவில்லை. தென்கலையார்களைப்பற்றி விசேஷப்ரஸ்தாவம் செய்த அவர் வடகலையார்களைப்பற்றி ப்ரஸ்தாவலேசமும் செய்யாதபடியால் அவருடைய காலத்தில் வடகலையார் ஒரு திவ்யதேசத்திலும் தலைகாட்டியிருக்கவில்லை யென்பது விளங்குகின்றது. உடையவர் ஸ்தானத்தில் அபிஷிக்தரான பட்டர் என்கிற மஹாசார்யரையும் எதிரியாகக்கொண்டவர்கள் வடகலையார்கள் என்பது லக்ஷ்மீஸஹஸ்ரத்தினால் விளங்குகின்றது.

ஆதிகாலத்திலிருந்தே வடகலை வகுப்பினர் திவ்யப்பிரபந்தங்களை வெறுத்தவர்களென்பது ஸ்ரீ உவே. V. V. ஸ்ரீநிவாஸய்யங்கார் முதலான கனவான்களாலு மெடுத்துக் காட்டப்படுகிறது. இப்போதும் வடகலை வகுப்பினர் ஆங்காங்கு ஆழ்வார் ஆசாரியர்களுக்கு நடக்கும் உத்ஸ

வங்களைத் தடைசெய்வதில் பிரபலமான முயற்சிகள் செய்துவருகிறார்கள். இவ்விஷயம் காஞ்சிபுரத்தில் ரிகார்டுகளில் ஏறியிருக்கிறது.

'பழைய காலத்தில் எங்கள் முன்னோர்கள் திவ்யப்ரபந்தங்களை வெறுத்திருந்தாலும் இப்போது திவ்யப்ரபந்தங்களிலும் ஆழ்வார்களிடத்திலும் மிகுந்த பக்தியுடையவர்களாகவே நாங்களிருந்து வருகிறோம்' என்று இக்காலத்து வடகலையார்கள் சிலர் சொல்லுவதுண்டு; திவ்யப்ரபந்தங்களில் உண்மையான ருசி விச்வாஸங்களிருக்குமாகில் திவ்யப்ரபந்தப் பேராசிரியர்களான நம்பிள்ளை, பெரியவாச்சான்பிள்ளை பிள்ளை லோகாசாரியர் மணவாளமாமுனிகள் முதலான ஆசார்யர்களின் திருவடிகளில் மறந்தும் அபசாரப் படலாகாது. தேசிகளிடத்திலும் பக்தி செய்வதைப்பற்றி யாரும் குறைகூற மாட்டார்கள். அவருடைய தனியனைச் சொல்லவேணுமானால் * ஸ்ரீமாந் வேங்கட நாதார்ய தனியனைச் சொல்லவேணுமே யொழிய, பிறந்தநாள் தொடங்கி எங்கும் பங்கமடைந்தேவருகிற பாத்திரத்தனியனை நெஞ்சாலும் நினைக்க நியாயமில்லை. அத்தனியன் மிகவும் நவீனமென்பதும் கோவில்களில் சண்டைக்காகவே போட்டியாகக் கல்பிக்கப்பட்ட தென்பதும் இந்நூலில் விரிவாகவும் பிராமாணிகமாகவும் நிரூபிக்கப்பட்டிருப்பதை தத்வஜிஜ்ஞாஸுக்கள் ஊன்றி நோக்கவேணும்.

இதைப் பார்த்தவுடனே சிலருக்கு ஆத்திரம்பொங்கி எதையாவது பதில் எழுதக்கூடும். பூருவாசாரியர்களை வாசாமகோசரமாக நிந்திக்க முன்வரக்கூடும். அதனால் விஷயத்திற்கு பதில்சொன்னதாக ஆய்விடாது. ஸ்ரீமத் கோழியாலம் ஸ்வாமிபோன்ற பெரியார்கள் நிந்தைகளில் ஈஷத்தும் மனம் செலுத்தாமல் விஷயங்களை மாத்திரம் எடுத்துரைக்க வல்லவர்களுண்டு. அப்படிப்பட்ட ப்ராமாணிகர்கள் என்ன அபிப்ராயப்படுகிறார்களென்பதை அவர்களுடைய திருவாக்கினால் உலகமுணரும்.

தேசிகனுடைய வாழி திருநாமத்தை ஸம்ஸ்க்ருத ச்லோகமாக மொழிபெயர்த்துத் தரவேணுமென்று (ஹிந்தி) ந்ருஸிம்ஹப்ரியா ஸம்பாதகர் நமக்கு எழுதியிருந்தார். அப்படியே நாம் எழுதியனுப்பிய ச்லோகரூபமான மொழிபெயர்ப்பை அவர் சென்றவாரத்தில் வெளியிட்ட ந்ருஸிம்ஹப்ரியாவில் (ஹிந்திப்பதிப்பில்) முகப்பில் வெளியிட்டிருக்கிறார். இதனால் நமக்கு, பிறர் சொல்லிவரும் வாழிதிருநாமத்தில் பகையில்லை யென்பதை உலகமுணரும். தத்துவார்த்தம் இன்னதென்பதை உலகுக்குத் தெளிவிப்பதென்பது தனிப்பட்டது. அதில் மாத்திரம் கண்செலுத்தி மாச்சரியங் கொள்ளாதிருக்க வேணுமென்று விஜ்ஞாபித்து நிற்கிறோம்.

P. B. அண்ணங்கராசாரியர்.

---

ஸ்ரீ



# ராமாநுஜ தயாபாத்ரத்தனியன் சரித்திரம்.

1. ஸ்ரீவைஷ்ணவக் கோவில்களில் தமிழ் வேதமாகிய திவ்யப்ரபந்தங்களை ஓதுவதென்பது ஸ்ரீமந் நாதமுனிகள் காலம் தொடங்கி (அதாவது சுமார் 1300௵ காலமாக) நடந்து வருகிறது. இது ஸ்ரீ ராமாநுஜர் காலத்தில் பிரபலப்பட்டது. அப்போது பிரபந்தங்கள் சேவிக்க ஆரம்பிக்கும்போது சில தனியன்களைச் சொல்ல வேணுமென்று ஏற்பாடு செய்யப்பட்டது. அதற்கு முன் காலத்தில் அந்தந்த பிரபந்தங்களை யியற்றிய ஆழ்வார்களின் தனியன்கள் மாத்திரமே சொல்லப்பட்டு வந்தன. பிறகு ராமாநுஜர் காலத்தில் **"லக்ஷ்மீநாத ஸமாரம்பாம்" "யோ நித்ய மச்யுத" "மாதா பிதா யுவதய:" "பூதம் ஸரச்ச"** என்கிற நான்கு தனியன்கள் ஆரம்ப காலத்தில் சொல்லும்படி கட்டளை யேற்பட்டது. இது கூரத்தாழ்வானுடைய நியமனமென்பர்.

2. அதன் பிறகு மணவாள மாமுனிகள் காலத்தில் ஸ்ரீ ரங்கநாதன் மணவாள மாமுனிகளுக்கு சிஷ்யனாகி அவரிடம் பகவத் விஷய காலக்ஷேபம் (அதாவது தமிழ் வேதவியாக்கியானத்தின் பிரவசனத்தை) கேட்டதற்கு உலகமறிந்த க்ருதஜ்ஞதையாம்படி **'ஸ்ரீசைலேசதயாபாத்ரம்'** என ப்ரஸித்தமாக வழங்கும் தனியனை வெளியிட்டு அதை ப்ரபந்தாரம்ப காலங்களில் மற்ற தனியன்களுக்கும் முன்னே கோவில்களிலும் க்ருஹங்களிலும் எவ்விடங்களிலும் நியதமாகச் சொல்லி வரும்படி கட்டளையிட, அன்று தொட்டு ஆஸேது ஹிமாசலம் அவ்விதமாகவே நடந்து வருகிறது. இதற்குத் தகுதியாக திவ்யப்ரபந்த முடிவு காலங்களிலும் மணவாள மாமுனிகள் விஷயமான வாழி திருநாமப்பாசுரங்கள் அவருடைய சிஷ்யர்களால் செய்யப்பட்டு அக்காலம் முதலாகவே அநுஸந்திக்கப்பட்டு வருகின்றன.

3. 'தென்கலையார்' என்று இப்போது வழங்கப்படுகின்ற வகுப்பினர் தென்கலையாகிய ஆழ்வார்களின் திவ்யப்பிரபந்தங்களையே கதியாகக் கொண்டவர்களென்கிற காரணத்தினுலேயே தென்கலையார் என்று வழங்கப் பெற்ருர்கள். ஆதிகாலந் தொடங்கி இந்த வகுப்பினர்களே கோவில்களிலும் மற்று எவ்விடங்களிலும் ஆழ்வார்பிரபந்தங்களை வடமொழிவேதத்திற்காட்டிலும் சிறந்ததாகக் கொண்டு பாராயணம் செய்வாராயினர். வடகலையார் என்று வழங்கப்படும் வகுப்பினர் பிரபந்தங்கள் பாஷாந்தர மென்று உபேக்ஷித்து அவற்றில் அன்பு கொள்ளாமல் வடமொழிக்கலையாகிய ஸம்ஸ்க்ருத வேதத்தையே கொண்டு போது போக்கி வந்தார்கள். அக்காரணத்தாலேயே வடகலையார்களென்று வழங்கப் பெற்ருர்கள். இவர்கள் கோவில்களுக்கு வருவதே அரிது. பெரும்பாலும் கருமாநுஷ்டானமே போது போக்காக இருந்தவர்களாதலால் ஆலயங்களில் வந்து கைங்கரியங்கள் செய்ய ருசி யில்லாமலிருந்தார்கள். கதாசித் உத்ஸவாதிகளில் வந்தாலும் வேதபாராயணத்தோடு திற்பர்களேயொழிய திவ்யப்ரபந்த பாராயணத்தில் சேர ப்ரஸக்தியே வைத்துக் கொண்டவர்களல்லர்.

4. தென்கலையார் வடகலையார் என்கிற **வேற்றுமைப் பெயரானது** மேலே விவரித்தபடி ப்ரபந்தாபிமானத்தையும் வேதாபிமானத்தையும் பற்றி வந்ததேயொழிய நெற்றியில் இடுகிற திருமண் பேதத்தைப்பற்றி வந்ததேயன்று. ஊர்த்வபுண்ட்ரத்திற்கும், தென்கலையார் வடகலையாரென்கிற வியவஹாரங்களுக்கும் யாதொரு ஸம்பந்தமும் கிடையாது. ஆனுல் நாளடைவில் இந்த வழக்கச் சொற்கள் ஊர்த்வபுண்ட்ரத்தைப்பற்றினதாகவே ஆயிருக்கிறது. நாஸிகா ஸம்பந்த மில்லாத ஊர்த்வபுண்ட்ரத்திற்கு வடகலைத் திருமண் என்றும், நாஸிகாஸம்பந்தமுடைய ஊர்த்வபுண்ட்ரத்திற்கு தென்கலைத் திருமண் என்றும் ஒரு ரூடியாகப் பெயர் வழங்கி வருவதானது இனி பிரளயத்திலும் அழியக் கூடியதன்று, மாறக்கூடியதுமன்று என்றே நினைக்கும்படியாகவுள்ளது. இது எப்படியிருந்தாலும், தென்கலை வகுப்பினர்க்கே திவ்யப்ரபந்தாபிமானமும் வடகலை வகுப்பினர்க்கு அது இல்லாமையும் இற்றைக்கும் எங்கும் ஒரேரீதியாகக் காணப்பட்டு வருகிறதென்பது மறைக்க முடியாத விஷயம். திருவுள்ளூர், திருவகிந்திரபுரம்,

கும்பகோணம் முதலிய 5, 6 ஊர்களில் வடகலை வகுப்பாரும் திவ்யப்ரபந்தாபிமானிகளாக இருந்து வருவதைக் காண்கிறோமே யென்னில், இது, இதர கோவில்களில் பாத்ர விவாதம் ஏற்பட்ட காலத்திற்குப் பிறகேயொழிய அதற்கு முன்பு கிடையாதென்பது உலக மறிந்த விஷயம். இதைப்பற்றி மேலே விவரிக்கக் காணலாம்.

5. கோவில்களில் விவாதம் ஏற்பட்டதாகச் சொல்லப்படு கிறதே, அதுஎப்போது ஏற்பட்டது? எதனாலேற்பட்டது? முதலில் எந்தவூரி லேற்பட்டது? இத்யாதிகளைப் பற்றிப்பலர் தெளிவாகத் தெரிந்து கொள்ள விரும்பக்கூடும். இதைப்பற்றின உண்மைகளை பிரபல அட்வகேட்டுகள் சிலர் வெளியிடுகிறார்கள். காஞ்சீபுரம் தேவராஜஸ்வாமி தேவஸ்தானம், திருமலை திருப்பதி தேவஸ் தானம் முதலான பத்தெட்டு தேவஸ்தானங்களில் வடகலை தென்கலை விவாதங்கள் பிரபலமாக ஏற்பட்டு ஹைகோர்ட்டு வரையில் பலதடவை சென்று முடிந்திருக்கிறது. சில தேவஸ் தானத்து விவாதங்கள் பார்லிமெண்டு வரையிலும் போய் முடிந் திருக்கிறது. காஞ்சீபுரத்து விவாதம் 60, 70 வருஷங்களுக்கு முன்பு பார்லிமெண்டு வரை போய்வந்தது. திருமலை திருப்பதி விவாதம் ஸமீபகாலத்தில் பத்தெட்டு வருஷங்களுள் பார்லி மெண்டு வரைபோய் முடிந்திருக்கிறது. இப்படிப்பட்ட விவகாரங் களில் பலவருஷங்கள் சிரமப் பட்ட வக்கீல்கள் இதன் தத்துவங் களை நன்கு கண்டறிந்து எழுதியிருக்கிற விஷயங்கள் இதற்கு அநுபந்தமாகச் சேர்க்கப் பட்டிருக்கின்றன. அதனால் ராமாநுஜ தயாபாத்ரத்தனியன் கோவில் சண்டைக்காகவே புதிதாக ஸ்ருஷ் டிக்கப்பட்டதென்பதும் அது எங்கும் நடைபெற்றே வருகிறதென் பதும் முதலான பலதத்துவங்கள் அறியலாகும்.

6. ஸம்ப்ரதாயரீதியில் தெரிவிக்கவேண்டிய தத்துவங்களை இங்கே ஸாரமாகத் தெரிவிக்கிறோம். வடகலையார்களென்னும் வகுப்பினர் அநாதிகாலமாகவே தமிழ் வேதத்தில் பிரவேச மில்லா தவர்ளென்பதை முன்னம் அவ்வகுப்பினருடைய வாக்குக்களைக் கொண்டே முதலிக்கிறோம். ஏறக்குறைய முந்நூறு வருஷங் களுக்கு முன்பு ‘அரசாணிபாலை வேங்கடாத்வரி என்றொரு மஹா வித்வான் இருந்தார். இவர் வடகலைவகுப்பினர். இவர்செய்த பல நூல்களுள் ‘**விச்வகுணதர்சம்**’ என்பது மொன்று. இந்நூலா

னது உலகமெல்லாம் பரவி ரகுவம்சம் மேகஸந்தேசம் முதலான காவியங்கள் போல் எங்கும் பாடமாக வாசிக்கப்பட்டு வருவதோடு பலலிபிகளிலும் வியாக்கியானத் தோடும் அச்சிடப் பட்டிருக்கிறது. பாம்பே நிர்ணயஸாகா அச்சுக் கூடத்திலும் பல வருஷங்களுக்கு முன் அச்சிடப்பட்டவிது வடஇந்தியாவிலும் பரவியிருக்கிறது. இந்நூலில், க்ருசாநு வென்றும் விச்வாவஸு வென்றும் இரண்டு கந்தருவர்கள் ஆகாசவிமானத்தில் தேசஸஞ்சாரம் செய்து கொண்டு போவதாகவும், க்ருசாநு வென்பவன் ஒவ்வொரு இடத்திலும் தோஷங்களையே சொல்லுவதாகவும் விச்வாவஸு வென்பவன் குணங்களையே யெடுத்துச் சொல்லுவதாகவும் வைத்து அநேகதேசங்களைப் பற்றின குண தோஷகீர்த்தனம் அமைக்கப் பட்டிருக்கிறது. அதில் ஸ்ரீபெரும்பூதூரைப் பற்றி வருணிக்க ப்ராப்தமானபோது அங்குள்ள ஸ்ரீவைஷ்ணவர்களைப் பற்றி க்ருசாநுவின் வாக்கால் சில விஷயங்கள் தெரிவிக்கப் பட்டுள்ளன. அவ்வூரில் தென்கலை வகுப்பினரே யிருந்தார் களென்பது ஸ்பஷ்டமாகத் தெரிவிக்கப்படுகிறது. எப்படி யென்றால், வைச்வதேவம் முதலியவற்றை விட்டவர்களென்றும், ஒரு முறை நமஸ்காரம் செய்பவர்களென்றும், க்ருஹாராதனத்தில் மணியடிக்காதவர்களென்றும் இப்படி சில குறைகள் அங்குள்ளவர் களுக்குக் கூறியிருக்கிறது. இவ்விஷயங்கள் நாளைக்கும் தென்கலை வகுப்பாரிடத்தில் காணப்படுகிறதே யொழிய வடகலைவகுப்பினரி டத்தில் இல்லை.

7. ஆகவே இங்கு க்ருசாநுவின் வாக்கு தென்கலை யார்களைப்பற்றியே தோன்றிய தென்பது ஸ்பஷ்டம். இவர்களை தூஷிக்கும் போது 'ஸம்ஸ்க்ருத வேதத்தை யுபேக்ஷித்துத் தமிழ்ப் பிரபந்தத்தை விசேஷமாக ஆதரிப்பவர்கள்' என்று குறை கூறியி ருக்கிறது. "नैषां न्याय्य इह द्विजान्वयजुषां भाषाप्रबन्धे श्रमः वेदे विश्वपुमर्थसाधनविधौ बद्धादरे जाग्रति—நைஷாம் ந்யாய்ய இஹ த்விஜாந்வயஜுஷாம் பாஷா ப்ரபந்தே ச்ரம: வேதே விச்வபுமர்த்த ஸாதநவிதௌ பத்தாதரே ஜாக்ரதி" என்கிற ஒரு ச்லோகத்தைக் காணலாம். இதில் என்ன சொல்லப்படுகிறதென்றால், 'பிராமணர்களாய்ப் பிறந்த இவர்கள் ஸகல புருஷார்த்த ஸாதகமான வேதம் இருக்கும்போது தமிழ்ப் பிரபந்தத்தில் சிரமப்படுவது நீதியன்று' என்று சொல்லப்படுகிறது.

இதனால் ஸ்பஷ்டமாக ஏற்படுவது என்னவென்றால்—வைச்வ தேவம் முதலானதுகளை அனுஷ்டிப்பவர்களும், ஆராதனத்தில் மணியடிப்பவர்களும், பலமுறை நமஸ்காரம் செய்பவர்களுமான வகுப்பினர்கள் தமிழ்ப் பிரபந்தங்களைத் தள்ளி வேதத்தையே ஆதரிக்கிறார்க ளென்றும் இதற்கு எதிரிடையான வகுப்பினர் வேதத்தில் நோக்கில்லாமல் தமிழ்ப் பிரபந்தங்களிலேயே போது போக்குகிறார்க ளென்றும் டி விச்வகுணாதர்ச நூலாசிரியர் கல் வெட்டுபோல் தெரிவித்ததாய் எற்படுகிறது. வைச்வதேவாதிகளை அனுஷ்டிப்பவர்களான வடகலை வகுப்பினரும் தமிழ்ப்பிரபந்தங் களில் ப்ரவேச முடையவர்களாக அப்போது இருந்திருப்பர் களானால் இந்த விச்வகுணாதர்சகாரர் இவ்விதமாகச் சொல்லி வைத்திருப்பாரா என்பதை விவேகிகள் விமர்சிக்க வேண்டும். அவர் தமது காலத்தில் தம் கண்ணால் என்ன நிலைமை கண்டாரோ அதைத்தான் எழுதிவைத்திருக்கிறார். அந்த நூல் தோன்றி இற் றைக்கு 250 வருஷங்களுக்கு மேலாகிறது. இந்த ஸந்தர்ப்பத்தில் மற்றொரு விஷயமும் கவனித்துக் கொள்ளவேண்டும். அதாவது இந்த அரசாணிபாலை வேங்கடாத்வரியே லக்ஷ்மீஸஹஸ்ரம் என் றொரு பெரிய க்ரந்தம் செய்திருக்கிறார். அது ஸ்ரீமஹாலக்ஷ்மியைப் பற்றின ஆயிரம் ச்லோகங்கள் கொண்டது. அதில் ஐச்வர்ய ஸ்தபகத்தில் (14)*ஸ்ரீமத்ராமாவாஜுஸரணிப்* என்கிற ச்லோகத்தில் ஸ்ரீராமாநுஜதர்சநகதைச் சேர்ந்த சில ஆசார்யர்கள் ஸ்ரீமஹா லக்ஷ்மிக்கு விபுத்வம் கொள்ளாமல் அணுத்வம் கொள்ளுவதாகச் சொல்லப்பட்டுள்ளது. அப்படி அணுத்வம் கொள்ளுகிற ஆசாரியர் கள் யார்? என்னில் (கூரத்தாழ்வான் திருக்குமாரரான )பட்டர் முதலானவர்கள்என்று வடகலைவகுப்பினரே வியாக்கியானம்செய்து அச்சிட்டு வைத்திருக்கிறார்கள். இதனால் இவ்வகுப்பினர் ஸ்ரீராமா நுஜ ஸ்தாநீயரான பட்டரையும் எதிரியாகக் கொண்டவர்க ளென் பது நன்கு தெரிகிறது. (இவ்விஷயம் இப்படியிருக்கட்டும்.)

8. இவ்வடகலை வகுப்பினர் ஆதிகாலத்திலிருந்தே தமிழ் வேதத்தை வெறுத்தவர்களென்பதற்கு, மற்றொரு சான்றும் கேளுங் கள். சென்னை மாநகரில் பிரபல அட்வகேட்டாக விளங்கிவரும் ஸ்ரீமத். V. V. ஸ்ரீநிவாஸையங்கார் ஸ்வாமிகள் (சென்னை ஹைகோர்ட் ஜட்ஜாக இருந்தவர் - வடகலை வகுப்பினர்) 22-7-1938ல்

வெளிவந்த சுதேசமித்திரன் பத்திரிகையில் "ராமாநுஜதயாபாத்ர மஹோத்ஸவம்" என மகுட மிட்டு ஒரு வியாஸம் வெளியிட்டிருக்கிறார். அதில்

"வடகலையார்கள் வெகுகாலமாகவே திவ்யப்ரபந்தங்களில் நிரர்தரவு காட்டி வருவது மிகவும் பரிதபிக்கத் தக்கது"

என்று எழுதி உலகமெல்லாம் பரவ வெளியிட்டிருக்கிறார். இப்படிப்பட்ட சப்தப்ரமாணங்களோடுகூட ப்ரத்யக்ஷப்ரமாணமும் 'வடகலை வகுப்பினர் திவ்யப்ரபந்தங்களில் ருசியற்றவர்கள்' என்பதை ஸ்தாபித்துத் தருகின்றது.

9. "முற்கால நிலைமை எப்படியிருந்தாலும் தற்காலத்தில் நாங்கள் சிலபேர்களாவது பிரபந்தங்களில் ஆஸ்தை யுள்ளவர்களாயிருக்கிறோ" மென்று இக்காலத்து வடகலை யார்கள் சொல்லக்கூடும். இதை மறுக்க வேண்டிய அவசிய மில்லை. நல்ல விஷயங்களில் ருசி என்றைக்கு ஏற்பட்டாலும் நல்லது தான். இதைப் பற்றி இங்கு விசாரமில்லை. இவ்வகுப்பினர் வெகு காலம் பிரபந்தத்தில் விமுகர்களாயிருந்து எப்போது இதில் அந்வயிக்கப் புகுந்தார்களோ அப்போது முதலாக பிரபலமான சச்சரவுகளையே யுண்டாக்கிக் கொண்டு நாளைக்கும் அந்த சச்சரவு ஓயாமல் மேன்மேலும் மிக வளருவதற்கே ஹேதுவாயிருந்து வருகிறார்கள் - என்பதுதான் இங்கே முக்கியமாக நிரூபிக்கப்படுவது. இந்த வடகலை வகுப்பினர் ப்ரபந்தங்களை தூஷித்துக் கொண்டிருந்ததை விட்டு இதில் அந்வயிக்கப் புகுந்ததைப் பற்றின தத்துவங்களை ஒன்று விடாமல் இங்கு விவரிக்கிறோம்.

10. ஏறக்குறைய 200 வருஷங்களுக்கு முன்பிருந்த மைஸூர் மகாராஜா ஒருவர் ஸதா ஸத்காலக்ஷேபமே பண்ணிக்கொண்டிருக்க விரும்பி திருநாராயணபுரத்திலிருந்து ஒரு தென்கலை ஜீயர் ஸ்வாமியைத் தம்முடைய அரண்மனைக்கு வரவழைத்து அவரிடத்தில் காலை வேளைகளில் பகவத் விஷய காலக்ஷேபம் செய்து வந்தார்- (அதாவது) தமிழ் வேதப் பொருள் கேட்டு வந்தார். மைஸூரிலேயே யிருந்த பெரிய பாகாலஸ்வாமி யென்கிற ஒரு வடகலை

யதியும் மாலை வேளைகளில் அந்த மஹாராஜாவிடம் சென்று ஸ்ரீராமாயணாதி இதிஹாஸபுராண ப்ரவசனம் செய்து வந்தார். இந்தவடகலையதிக்கு தமிழ்வேதத்தில்ப்ரவேசமில்லாமலிருந்ததைக் கண்ட அந்த மஹாராஜா "சிறந்த ஜ்ஞாதாவான இந்த யதிக்கு பகவத் விஷயஜ்ஞான ஸம்பத்தும் ஏற்பட்டால் நன்றாயிருக்குமே" என்றெண்ணி இவர்க்கு அதில் ருசியை யுண்டாக்க விரும்பி, தினப் படி காலை வேளைகளில் நடக்கும் பகவத் விஷய காலக்ஷேப கோஷ்டிக்கு இந்த யதியையும் வரச்செய்தார். இவரும் போயிருந்து கேட்ட வளவில் நித்தியமும் வந்து கேட்கவேணு மென்று ஆசை யுண்டாகி அப்படியே பலநாள் வந்து கேட்டார். கேட்கக்கேட்க அந்த யதியின் மனதில் என்ன தோன்றியதென்றால், இதுவரையில் தாம் ஸம்பாதித்த ஞானம் ஞானமேயன்று என்றும், பகவத்விஷய காலக்ஷேபம் ஸாதிக்கிற ஜீயர்ஸ்வாமியின் ஞானமேதான் உயர்ந்த ஞானமென்றும், அப்படிப்பட்ட ஞானத்தைத் தாமும் ஸம்பாதித்துக்கொள்ள வேணுமென்றும் தோன்றியதாம். அது முதலாக அவர் அந்த ஜீயர்ஸ்வாமியை அநுவர்த்தித்து நாலாயிர திவ்யப்ரபந் தங்களையுங்கற்று வியாக்யானங்களையும் அதிகரிக்க ஆரம்பித்தார். சில வருஷங்களுக்குள்ளேயே அந்த யதி நல்ல பகவத் விஷயாதி காரியாகி அந்த மஹாராஜாவுக்கே தாமும் பகவத் விஷயப்ரவசனம் செய்து சிறப்புக்களைப் பெற்றார். அவர் அவ்வளவோடும் நில் லாமல் திருவாய் மொழிக்கு பதினெண்ணாயிரப்படி யென்றொரு வியாக்கியானமும் செய்தார். அது தமிழ்லிபியிலும் தெலுங்குலிபி யிலும் அச்சிடப்பட்டு மிருக்கிறது. அதில் ஆரம்பத்தில் ஒருச் ச்லோகம் இயற்றியிருக்கிறார்; அதில் சொல்லி யிருப்பதாவது "இந்தத் திருவாய்மொழிக்கு தென்கலை யாசாரியர்கள் வியாக்கி யானம் செய்திருக்கிறார்கள்; அது மிகவும் ஸ்வாரஸ்யம் பொருந்திய தாயிருக்கிறது. ஆனால் சில அர்த்த விரோதங்களு மிருக்கிறது. அந்த விரோதங்களைத் தள்ளிவிட்டு அந்த ஆசாரியர்களின் சுவை மிக்க வியாக்கியான பங்க்திகளையே கொண்டு நான் இந்த வியாக்கியா னம் எழுதுகிறேன்" என்று சொல்லியிருக்கிறார். திருவாய்மொழிக்கு மாத்திர மல்லாமல் வேறு சில பிரபந்தங்களுக்கும் வியாக்கி யான மெழுதியிருக்கிறார். அவையும் அச்சிடப் பட்டிருக்கிறது.

11. இப்படி வியாக்கியானமெழுதுவதோடும் நில்லாமல் வேறொரு காரியமும் ஆரம்பித்தார். அதாவது, கோவில்களில்

நடந்து வருகிற திவ்யப்ரபந்த கோஷ்டிகளில் தாமும் அந்வயித்து தம்முடைய சிஷ்யர்களையும் அந்வயிக்கச் செய்ய வேணு மென்கிற ஆசைகொண்டு தம்மிடமிருந்த சில சிஷ்யர்களுக்கு முக்கியமான சில ப்ரபந்தங்களைச் சொல்லிவைத்தார். அவர்களையுமழைத்துக் கொண்டுதென்னாட்டுத் திவ்ய தேசங்களில் யாத்திரையாகப் புறப்பட்ட அந்த யதி முதன்முதலாகத் திருநாராயண புரத்திலே சென்று அங்கு செல்வப் பிள்ளை ஸன்னிதியில் தென்கலையத்யாபக ஸாது ஸ்ரீவைஷ்ணவர்கள் நடத்தி வருகிற திவ்யப்ரபந்த கோஷ்டியிலே அந்த சிஷ்யர்களை ப்ரவேசிப்பித்தார்.

12. அப்போது அந்த க்ஷேத்திரத்திலே முதன் முதலாகத் தனியன் விவாதம் உண்டாயிற்று. "ராமாநுஜ தயாபாத்ரத் தனியன் திருநாராயணபுரத்தில் அவதரித்தது" என்று வடகலையார்களே எழுதியிருப்பது உண்மையான விஷயம். அந்தத் தனியன் தோன்றின காலத்தை மாறுபடுத்தி எழுதியிருந்தாலும் அது தோன்றின இடத்தை மாத்திரம் மாறுபடுத்தாமலே யெழுதியிருக்கிறார்கள். "ஸ்ரீசைலேச தயாபாத்ரம்" என்கிற தென்கலையாசாரியர் தனியனுக்குப் போட்டியாக வேதாந்த தேசிகர் என்கிற ஆசார்யருடைய தனியனைச் சொல்ல வேணு மென்கிற எண்ணம் அந்த யதிக்கு உண்டாயிற்று. "ஸ்ரீமாந் வேங்கட நாதார்ய: கவிதார்க்கிக கேஸரீ, வேதாந்தாசார்யவர்யோ மே ஸந்நிதத்தாம் ஸதா ஹ்ருதி" என்பது வேதாந்த தேசிகருடைய தனியன். இது தேசிகருடைய காலத்திலேயே தோன்றிய தனியன். இந்தத் தனியனைச் சொன்னால், ஸ்ரீசைலேசதயாபாத்ரம் என்கிற தனியனுக்கும் இதற்கும் வித்தியாஸம் மிகவு மிருப்பதால் அதிகமான வாசி தெரியுமென்று நினைத்து அதைச் சொல்லாமல் "ராமாநுஜ தயாபாத்ரம் ஜ்ஞாநவைராக்ய பூஷணம், ஸ்ரீமத் வேங்கட நாதார்யம் வந்தே வேதாந்த தேசிகம்" என்றொரு தனியனை நூதனமாக ஸ்ருஷ்டித்து இதைப் போட்டியாகச் சொல்ல ஆரம்பித்தார்கள். சில நாள் வரையில் மெதுவாகச் சொல்லிவந்து நாளடைவில் உரக்கச் சொல்ல ஆரம்பித்தார்கள். அப்போது விவாதம் உண்டாகி தென்கலை வகுப்பினர் மைஸூர் ஸம்ஸ்தான அதிகாரிகளிடத்தில் முறையிட்டுக் கொண்டார்கள். அவ்வதிகாரிகளுக்கு இந்த விஷயம் புரியாமையாலே "எது புதியதோ எது பழையதோ அது

நமக்குத் தெரியாது, யார் எதை வேணுமானாலும் சொல்லிக் கொள்ளுங்கள் ; ஆக்ஷேபித்துச் சண்டையிடுமவர்கள் யாராயிருந்தாலும் தண்டனைக்கு ஆளாவர்கள் " என்கிற முடிவுதான் அங்கு ஏற்பட்டதாம். இதனால் அவ்விடத்தில் ஸ்ரீசைலேச தயாபாத்ரத் தனியனோடுகூட ராமாநுஜ தயாபாத்ரத் தனியனையும் சொல்லுவதற்கு இடமுண்டாயிற்று. இந்த வரலாறு ஒரு கன்னட புஸ்தகத்தில் விரிவாகவுள்ளது.

13. பிறகு அந்த யதி தென்னாடுகளிலும் யாத்திரை செய்து அந்த ராமாநுஜ தயாபாத்ரத் தனியனை ஆங்காங்கு புகுரச் செய்யப் பெரும்பாடுகள் பட்டார். காஞ்சீபுரத்தில் வந்து ஸன்னிதி வீதியில் சிலகாலம் தங்கியிருந்து ஸ்ரீதேவராஜஸ்வாமி தேவஸ்தானத்திலும், தேசிகருடைய அவதாரஸ்தலமான தீபப்ரகாச ஸ்வாமி கோவிலிலும் இந்தத் தனியனைப் புகுரச்செய்ய வேணுமென்று வெகுப்ரயாஸப்பட்டார். சிறிதும் ஸாத்யப்படவில்லை. அப்போது காஞ்சீபுரத்தில் தாதாசார்ய வம்சஸ்தர்கள் திவ்யப்ரபந்தம் தொடங்குகிற மிராசுதாரர்களாயிருந்தபடியாலும், அவர்கள் ஸ்ரீசைலேசதயாபாத்ரத் தனியன் சொல்லியே தொடங்கிவந்தபடியாலும் அதை எப்படியாவது மாற்றிவிட வேண்டுமென்று கருதிய இந்த யதி, காஞ்சியில் அப்போது ப்ரபலராயிருந்த வொரு தாதாசார்யரை மிகவும் அநுவர்த்தித்து, தாம் கொண்டுவந்த ராமாநுஜதயாபாத்ரத் தனியனையும் ஏற்றுக் கொள்ளும்படி வெகு நிர்ப்பந்தம் செய்தார். அவர் ஒரு விதத்திலும் ஸம்மதிக்காமற் போகவே அவருடைய க்ருஹத்வாரத்தில் சாபோதகமிட்டுப் போனாரென்பது காஞ்சீமண்டலம் முழுவதும் அறிந்த விஷயம். இந்த யதி தெற்கே யாத்திரை புறப்படும்போது 70, 80, தேசிக விக்ரஹங்களைச் செய்வித்து எடுத்துக்கொண்டுபோய் ஆங்காங்கு திவ்ய தேசங்களில் பிரதிஷ்டை செய்வித்தா ரென்றும் இவருடைய சரித்திரத்தில், இப்போதுள்ள ஸ்ரீபரகாலஸ்வாமி பிரசுரம் செய்திருப்பதும் காண்க. இதனால் திவ்ய தேசங்களில் தேசிக விக்ரஹஸ்தாபனமே நவீனமென்று ஏற்படுகிறது. எல்லாவிடங்களிலும் நவீனம்—என்று சொல்லுவதற்கில்லை. ஆனால் பரகால மடத்தார் அப்படி யெழுதி வைத்திருக்கிறார்கள். அது நிற்க. கோவில்களில் கலஹம் ஏற்படுவதற்கு இந்த யதியே விதைவிதைத்தவரென்பதில் ஐயமில்லை. இவ

ருடைய பெரு முயற்சியால் அப்போது தெற்கே சிலசிலவிடங்களில் இந்த ராமாநுஜ தயாபாத்ரத் தனியன்புகுர ஆரம்பித்தது. அப்போது காஞ்சீபுரத்தில் இத்தனியனை ஏற்றுக்கொள்ள மறுத்த தாதாசாரியர்களும் சிலகாலம் பொறுத்து பிரபல துர்ப்போதனைகளினுல் ஸ்ரீசைலேச தயாபாத்ரத் தனியனைத் தவிர்த்து இந்த புதுத் தனியனைச் சொல்ல முயற்சி செய்தார்கள். அதிலிருந்து நியாயாலய விவகாரங்கள் முற்றி அந்த வகுப்பினர் பிரபந்தம் சேவிக்கிற அதிகாரத்திலிருந்து அறவே விலக்கப்பட்டு நின்றார்களென்பது பிரத்யக்ஷம். இந்த ராமாநுஜ தயாபாத்ரத் தனியனைச் சொல்லக் கூடாதென்று கோர்ட்டுகளில் பிறந்த தடையுத்தரவுகள் கணக்கிலடங்கமாட்டாது; 144 ஸெக்ஷன்படி ஆர்டர்கள் எத்தனை! சாச்வத இஞ்சங்ஷன் உத்தரவு அமைந்த ஜட்ஜ்மெண்டுகள் எத்தனை! மீறி அதனை உத்கோஷித்தவர்களுக்கு நேர்ந்த ராஜ தண்டனைகள் எத்தனை விதம்! இதெல்லாம் ஒரு மஹாபாரதமாகவுள்ளது.

14. இப்படி கோவில் சண்டைகளுக்காக 200 வருஷங்களுக்குப்பின் ஸ்ருஷ்டிக்கப்பட்ட இந்த ராமாநுஜ தயாபாத்ரத் தனியன் தேசிகருடைய காலத்திலேயே [அதாவது 600 வருஷங்களுக்கு முன்னே] தோன்றியதென்று இக்காலத்தவர்கள் சொல்லியும் எழுதியும் வருவதானது முழு மோசமான விஷயம். இதைப் பற்றி மிகவும் விரிவாகவே உண்மைகளைத் தெரிவிக்கிறோம். ஒரு ஆசாரியர்க்கு ஒரு தனியன் தான் உள்ளது. ஒருவரைப் பற்றி ஸ்தோத்ரமாகப் பதினயிரம் ச்லோகங்களும் தோன்றலாம். ஆனல் தனியன் என்று கொண்டாடப்படுகிற ச்லோகம் ஒன்று தானுள்ளது. இரண்டு தனியன்கள் என்பது ஒரு ஆசாரியர்க்கும் கிடையாது. தேசிகருக்கு ஸ்ரீமாந் வேங்கடநாதார்ய: என்கிற தனியன் ஒன்றுதான் உண்மை. அது தான் நாளைக்கும் எங்கும் வெற்றியுடன் விளங்குவது. அது இருக்க, அதை விட்டு இந்த ராமாநுஜ தயாபாத்ரத் தனியனை எதற்காக ஸ்ருஷ்டித்தார்கள்? என்பதைப்பற்றின மருமங்களைத் தெரிவிக்கிறோம். இது தலையான விஷயம்.

15. கேண்மின். தமிழ்ப்பிரபந்தங்கள் தொடங்கும் போது "விட்டுத் தொடங்குவதென்று" ஒரு ஸம்பிரதாயம். அதாவது,

"பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு" என்கிற பாட்டைத் தொடங்கவேணுமாளுல் 'பல்லாண்டு பல்லாண்டு' என்பதை விட்டுவிட்டு 'பல்லாயிரத்தாண்டு' என்று தான் தொடங்குவது; "மார்கழித் திங்கள் மதி நிறைந்த" என்பதை 'திங்கள் மதி நிறைந்த' என்றுதான் தொடங்குவது. 'கண்ணிநுண் சிறுத் தாம்பினுல்' என்பதை 'சிறுத்தாம்பினுல்' என்று தான் தொடங்குவது. 'உயர்வறவுயர் நல முடையவன்' என்பதை "நலமுடையவன்" என்றுதான் தொடங்குவது. எதை ஆரம்பித்தாலும் முதலில் சில வார்த்தைகளை விட்டிட்டே தொடங்குவது. இந்த வழக்கம் நாளைக்கும் நிகழ்ந்து வருகிறது. இவ்விதமாகவே ஸ்ரீசைலேச தயாபாத்ரம் என்று தொடங்கும் போதும் ஸ்ரீசைலேச என்பதை விட்டு தயாபாத்ரம் என்றே தொடங்குவது. இதில் போட்டி விவாதம் ஏற்பட்ட பிறகே ஸ்ரீசைலேச தயாபாத்ரம் என்றே தொடங்கிவருகிருர்கள். நாளைக்கும் தயாபாத்ரமென்றே தொடங்குகிற சம்பிரதாயத்தை வானமாமலை முதலான [அடியோடு விவாத முண்டாகாத] ஸ்தலங்களில் காணலாம். (தயாபாத்ரம்) என்றே தொடங்கிக் கொண்டிருந்த காலத்தில், புதிதாக வந்து சேர ஆரம்பித்த வடகலை வகுப்பினர்கள் தாம் வேருென்று தொடங்குவதாகக் காட்டிக் கொள்ளாமல் அதையே தொடங்குவதாகக் காட்டிக் கொள்ள வேண்டி (ராமாநுஜ தயாபாத்ரம்) என்று தயாபாத்ரச்சொல் கொண்ட ச்லோகமொன்றை ஸ்ருஷ்டித்து, தாங்களும் தயாபாத்ரமென்றே ஆரம்பிப்பதாகக் காட்டி வந்தார்கள்.

16. ஒரே சொல்வடிவமாக ஆரம்பித்துவிட்டு, பிறகு வேருன சொற்களைச் சொல்லிவந்தனர். அவரவர்கள் தம்தம் ஆசாரியர்களைப்பற்றின தோத்திரங்களைச் சொல்லிக் கொள்வது வழக்கமென்று பிறகு வாதாட ஆரம்பித்தார்கள். ஸ்ரீமாந் வேங்கடநாதார்ய தனியனை வைத்துக் கொண்டு ஆரம்பம் செய்தால் தொடங்கும் போதே வேற்றுமை நன்ருகத் தெரியுமாதலால் முதலிலேயே மஹத்தான ஆக்ஷேபமும் கலஹமும் ஏற்பட்டுவிடுமென்று இதை ஆலோசித்தே அந்த யதிகள் அந்தத் தனியனைவிட்டு தயாபாத்ரமுள்ள புதுத் தனியனை ஸ்ருஷ்டித்தாரென்பது உண்மையான மூலதத்வம். தென்கலையாருடைய கோஷ்டியில் சேர்ந்து ஸேவிக்

கும் போது விசேஷப்படியான வித்தியாஸங்களைக் காட்டாமல் கலந்து ஸேவிப்பதாகவே பாவனை காட்டுவதற்கு வெகு சூது செய்தார்கள். திவ்யப்ரபந்தம் ஆரம்பிக்கும் போது பாத்ரத் தனியன் ஒன்றில் மாத்திரமே பேதம். முடிக்கும் போது (சாத்து முறை செய்கையில்) அதிகமான பேதங்களுண்டு. ஆனாலும் அங்கே ஸம்ஸ்க்ருதச்லோகங்களும் தமிழ்வாழிப் பாட்டுக்களும் விருத்தத்தில் சிறிதும் பேதப்படாதபடி அநுஷ்டுப்பு உள்ள விடத்தில் அநுஷ்டுப்பும், வெண்பாவுள்ள விடங்களில் வெண்பாக்களும், ஆசிரியப்பாவுள்ள விடத்தில் ஆசிரியப்பாவுமாகவே ஸ்வரபேதம் ஏற்படாதபடி செய்து சொல்ல ஆரம்பித்தார்கள். அதைப்பற்றி மேலே விரிவாகச் சொல்லுவோம். பாத்ரத்தனியனே சண்டைக்கு மூலமாகையாலே அதைப்பற்றிச் சொல்ல வேண்டியதையெல்லாம் முன்னம் சொல்லி முடிக்கிறோம்.

17. இந்த ராமாநுஜ தயாபாத்ரத் தனியன் புதிதாய் சண்டைக்காக ஸ்ருஷ்டிக்கப்படவில்லை யென்றும், தேசிகர் காலத்திலேயே இதுவும் தோன்றியிருந்த தென்றும், அப்போது முதலாகவே இதுவும் ப்ரசாரத்திலிருந்து வருகிறதென்றும் வடகலையாருடைய வாதம். இந்த வாதம் சிறிதும் பொருந்தாதென்பதைக் கல்வெட்டாக நிரூபிக்கிறோம். இந்நூலில் இதுதான் ஸாரமான கெட்டம். இதில் நாமெழுதும் ஒவ்வொரு விஷயமும் அசைக்கமுடியாத தென்பதை மத்யஸ்த த்ருஷ்டியுள்ளவர்கள் நன்கு அறிவர்கள். மணவாள மாமுனிகளின் காலத்திற் காட்டிலும் தேசிகருடைய காலம் முற்பட்டது. தேசிகர் பரமபதித்த பிறகே அடுத்த வருஷத்தில் மணவாள மாமுனிகள் திருவவதரித்தார். ஆதலால் தேசிகருடைய தனியன் முந்தினதாகவும் மணவாள மாமுனிகளின் தனியன் பிந்தினதாகவும் இருக்கத் தக்க தென்று யாவரும் நினைக்கக் கூடியது. இது உண்மையே. "ஸ்ரீமாந் வேங்கட நாதார்ய:" என்பதுதான் தேசிகருடைய தனியன். மணவாள மாமுனிகளின் ஸ்ரீசைலேச தயாபாத்ரத் தனியனைக் காட்டிலும் *ஸ்ரீமாந் வேங்கட நாதார்ய தனியனே முற்பட்ட தென்பதில் ஸந்தேஹமில்லை, யாருக்கும் விவாதமுமில்லை. அந்தத் தனியனைப் பற்றின விவாதம் சிறிதுமில்லை. ராமாநுஜ தயாபாத்ரத் தனியனை நூதனமாக ஸ்ருஷ்டிக்கவேண்டிய காரணத்தைக் கீழ் பதினைந்தாவது

பாராவில் உள்ளபடி தெரிவித்திருக்கிறோம்; அதை மறந்துவிடக் கூடாது. அந்த ராமாநுஜ தயாபாத்ரத் தனியனும் தேசிகர் காலத்திலேயே செய்யப்பட்டிருந்ததாகச் சொல்லுகிறார்கள். அது பச்சைப்பசும் பொய்யானது. (ஸ்ரீமாந் வேங்கட நாதார்ய:) என்கிற கம்பீரமான தனியன் இருக்கும்போது இந்த ராமாநுஜ தயாபாத்ரத் தனியன் எதற்காகச் செய்யப்பட்டதென்கிற கேள்வி அவசியம் எழுகின்றது. இதைப்பற்றி வடகலையார்கள் ஒவ்வொருவர் ஒவ்வொருவிதமாக எழுதி வைத்திருக்கிறார்கள்; எல்லாம் முழுப்பொய் என்பதை எளிதாகக் காட்டுகிறோம்.

18. ஸ்ரீமாந் வேங்கட நாதார்ய தனியனில் தேசிகருடைய ஆசார்யரின் ப்ரசம்லை இல்லையென்றும், அது இல்லாமலிருப்பது குறையென்றும், அக்குறை தீருவதற்காகவே ராமாநுஜ தயாபாத்ரத் தனியன் செய்யப்பட்டதென்றும், இதில் (ராமாநுஜ) என்றது தேசிகருடைய மாதுலரும் ஆசார்யருமான கிடாம்பியப்புள்ளாரென்கிற ஆத்ரேய ராமாநுஜா சார்யரையாதலால் அவ்வாசார்யருடைய பெயரையிட்டதனாலே குறை தீர்ந்துவிட்டதென்றும் எழுதிவைத்திருக்கிறார்கள். இதை இப்படியே ஒப்புக் கொள்ளுவோம். இதனால் ஸ்ரீமாந் வேங்கடநாதார்ய தனியன் குறையோடு கூடினதாகையாலே அத்ருப்திக்கு இடமாயிற்றென்று தேறிவிட்டது. குறையொன்றுமில்லாத ராமாநுஜ தயாபாத்ரத் தனியன் தோன்றினபின் குறையோடு கூடின ஸ்ரீமாந் வேங்கட தனியன் பிரசாரத்திலில்லாமல் மறைந்திருக்கவேண்டும். அப்படியில்லையே. ராமாநுஜ தயாபாத்ரத் தனியனை யாரோ சில வம்புக்காரர்கள் சண்டைக்காக கோஷித்து வருகிறார்களே யொழிய, ஸகல பேர்களும் ஸ்ரீமாந் வேங்கடத் தனியனைத்தானே ஆதரித்து வருகிறார்கள். நாளைக்கும் ராமாநுஜ தயாபாத்ரத் தனியனை வெறுக்கின்ற வடகலையார்கள் ஸ்ரீமத் நாவல்பாக்கம் ஸ்வாமி போல்வார் பலருண்டே. 'அப்படியில்லை, எல்லாரும் ஏகரீதியாகவே ஆதரிக்கிறோம்' என்றே சொல்லட்டும். குறையோடு கூடின ஸ்ரீமாந் வேங்கட தனியனை எதுக்கு இன்னமும் வைத்துக்கொண்டிருக்கிறீர்கள்? என்று கேட்டால் இதற்கு பதில் இல்லையே. தனியன்களில் ஆசார்ய நாமமில்லாமலிருப்பது குறை—என்று சொல்லுவதும் பிசகு. மணவாள மாமுனிகளின் தனியனில் ஆசார்ய

நாமநிர்தேசமிருக்கிறது உண்மை. அஃதில்லாத பல தனியன்களுண்டே. அவற்றுக்கெல்லாம் குறைகூறுவது மஹாபசாரமாகும். ஆசார்ய நாம நிர்தேசமில்லாத தனியன்களேயன்றோ அதிகம்.

19. வேறு சிலர் என்ன எழுதிவைத்திருக்கிறார்களென்றால், தேசிகரிடத்தில் அவருடைய திருக் குமாரரும் ப்ரஹ்மதந்த்ர ஸ்வதந்த்ரஸ்வாமியும் வேதாந்தக்ரந்தங்களை அதிகரித்துக் கொண்டிருந்தார்கள் ; த்ராவிட வேதாந்தம் ஆரம்பிக்கும் போது ப்ரஹ்மதந்த்ர ஸ்வதந்த்ரஸ்வாமி விலகிக் கொண்டார்—அந்த பகவத் விஷய காலக்ஷேப கோஷ்டியில் அவர் சேர வில்லையாம் ; ஏன் விலகிக் கொண்டீர் ? என்று தேசிகர் கேட்க ; ‘ஸ்வாமியின் திருக் குமாரரிடத்தில் சிஷ்யவ்ருத்தி செய்ய வேணுமென்று எனக்கு ஆசையாயிருக்கிறது. அவர் தேவரீரிடத்தில் பகவத் விஷயம் கேட்கட்டும் ; பிறகு அவரிடத்தில் நான் சிஷ்யனாயிருந்து கேட்கிறேன்’ என்று சொன்னாராம். தேசிகர் அது கேட்டு மிகவும் உகந்து அவருடைய நிஷ்டாவிசேஷத்தைக் கொண்டாடினாராம். அப்படியே அவர் விலகியிருந்து, திருக்குமாரர் பகவத்விஷய காலக்ஷேபம் செய்து முடித்த பிறகு அவரிடத்தில் தாம் பகவத் விஷயம் கேட்கத் தொடங்கினபோது இந்த ராமாநுஜ தயாபாத்ரத் தனியனைச் செய்து தாமும் அநுஸந்தித்து மற்றுள்ளாரையும் அநுஸந்திக்க நியமித்தாராம். இப்படி யொரு கட்டுக்கதையை ஸ்ருஷ்டித் திருக்கிறார்கள். இதைப்பற்றியும் தெளிவாகக் கேளுங்கள்:

20. சோளங்கிபுரம் தொட்டயாசாரியர் ஸாதித்ததாக இவர்களால் கொண்டாடப்பட்டு வருகிற வேதாந்த தேசிக வைபவப்ரகாசிகா நூலில், திருக் குமாரரான நயனாராசாரியரும், ப்ரஹ்மதந்த்ர ஸ்வாமியும் இருவரும் சேர்ந்தே தேசிகரிடத்தில் பகவத் விஷய காலக்ஷேபம் செய்ததாக ஒரு ச்லோகம் அமைத்திருப்பதால் அந்த நூலை அயதார்த்தமாக்கிச் சொல்லப்படுகிற இந்த ஐதிஹ்யம் கல்பிதமென்பதில் என்ன ஸந்தேஹம்? கல்பனையான இந்த ஐதிஹ்யம் வெகு மோசமாக எழுதப்பட்டிருக்கின்றது இவர்களால். இந்த விவாதத்தில் இதுதான் உயிரான பாகமாதலால் இதை நன்றாக விவரிப்போம். த்ருதீய ப்ரஹ்மதந்த்ர ஸ்வாமி எழுதின

தாக ஒரு குருபரம்பராப்ரபாவம் வெகு நாளைக்குமுன் அச்சிட்டிருக்கிறார்கள். கலிஹூ 4973 ப்ரஜோத்பத்தி வருஷத்தில் அச்சிட்ட பிரதி எங்கும் பரவியுள்ளது. அது வெளிவந்து ஸுமார் 82 வருஷம் ஆகிறது. இதில் தேசிகர் வைபவப்ரகாணத்தில் (பக்கம் 105ல்) ராமாநுஜ தயாபாத்ரத் தனியன் பிறந்த வகைகள் நிரூபிக்கப்பட்டிருக்கின்றன. தேசிகன் திருவடிகளில் ஆச்ரயித்திருந்த ஒன்றான ப்ரஹ்ம தந்த்ரஸ்வதந்த்ரஸ்வாமி, பகவத் விஷய க்ரந்தத்தை மாத்திரம் தேசிகனிடத்தில் அதிகரியாமல் அவருடைய திருக்குமாரரான நயினாராசார்யரிடத்தில் அதிகரிக்க விரும்பினதாகவும், அப்படி அதிகரிக்கத் தொடங்கும்போது ராமாநுஜதயாபாத்ரம் என்கிற இந்தத் தனியனை அவர் கவிபண்ணி அநுஸந்தித்து வந்ததாகவும், இதைச் சிலர் தேசிகரிடத்திலே போய்த் தெரிவித்ததாகவும், அவர் ஏற்கெனவேயுள்ள ஸ்ரீமான் வேங்கட தனியனையும் இந்த நூதநபாத்ரத் தனியனையும் சேர்தூக்கிப் பார்த்து, இந்த பாத்திரத்தனியனே மிகவும் கொண்டாடத்தக்கது என்று அருளிச்செய்ததாகவும், பிறகு சிஷ்யர்கள் தேசிகரை வணங்கி ‘நாங்கள் எந்தத் தனியனை அநுஸந்திப்பது?’ என்று கேட்க அப்போது தேசிகர் “ஸ்ரீமாந் வேங்கட தனியன் முன்னமே ச்ருதப்ரகாசிகாபட்டர் திருவுள்ளமுகந்து நியமித்திருக்கையாலே அதை விடுவதற்கில்லை; இந்த நூதந பாத்திரத்தனியன் எனக்கு உகப்பாயிருக்கையாலே இதையும் விடுவதற்கில்லை; ஆகவே ஒரு வ்யவஸ்தை பண்ணிவிடுகிறேன்: ஸ்ரீபாஷ்யம் முதலிய ஸம்ஸ்க்ருத க்ரந்தங்களை அதிகரிக்கும்போது ஸ்ரீமாந் வேங்கடதனியனை வைத்துக் கொள்ளுங்கோள்; பகவத் விஷயம் ரஹஸ்யம் முதலான தமிழ்க்ரந்தங்களை அதிகரிக்கும்போது இந்த நூதநபாத்ரத்தனியனை வைத்துக்கொள்ளுங்கோள்” என்று ஏற்பாடு செய்து கொடுத்ததாகவும், அதைக் கேட்டவுடனே சிஷ்யர்களும் மற்றுள்ள பெரியோர்களும் ஒக்கும் ஒக்கும் ஒக்கும் என்று உகந்தருளினதாகவும், இவ்வளவும் திருநாராயணபுரத்தில் நடந்ததாகவும்; பிறகு பத்து வருடம் கடந்தபின்பு தேசிகர் ஸ்ரீரங்கத்திற்கு எழுந்தருளினதாகவும், அங்கு மதாந்தரஸ்தர்களால் தமிழ்வேதபாராயணத்திற்கு இடையூறுகள் பிரபலமாக ஏற்பட்டு அத்யயநோத்ஸவம் தடைப்பட்டுப்போனதாகவும், அந்த உபரோதங்களையெல்லாம் தேசிகரே வாதங்கள்செய்து போக்கியருளி அத்யயநோத்ஸவத்தைக் குறையற

நடப்பித்ததாகவும் அப்போது நம்பெருமாள் திருவுள்ளமுகந்து இந்த நூதன பாத்ரத்தனியனையும் இதைச் சேர்ந்த வாழித் திருநாமம் முதலியவற்றையும் பக்தர்களின் விருப்பத்தின்படி ஸந்நிதிகளிலெங்கும் கோஷிக்குமாறு நியமித்து, முதன் முதலாக அந்த ஸ்ரீரங்கநாதர் அரையர் திருவாக்காலே திருச்செவிசாத்தி இவ்வண்ணமாகவே ஸகல திவ்யதேசங்களிலும் ஸகல திருமாளிகைகளிலும் அநுஸந்திக்கும்படி கட்டளையிட்டதாகவும் அதில் எழுதப்பட்டுளது. ஸ்ரீரங்கநாதனுடைய கட்டளையென்று தெரிவிக்கப்பட்ட இவ்விஷயம் எவ்வளவு உண்மை என்பதை ஸகல திவ்ய தேசங்களின் நிலைமையே நன்கு ஸ்தாபித்துவிடுமாதலால் இந்த முழுப் பொய்யைப்பற்றி இங்கு நாம் யாதொன்றும் எழுதத்தேவையில்லை.

21. நூதன பாத்ரம் ஜனித்ததானது தமிழ் க்ரந்தங்களுக்குத் தனியனாகவேயென்று பிறருடைய பல நூல்களிலுள்ளது. தேசிகரே அப்படி வ்யவஸ்தை பண்ணி நியமித்தருளினர் என்றும் எழுதி வைத்திருக்கிறார்கள். தேசிக சரித்திரம் யார் யார் எழுதி வைக்கிறார்களோ அவர்கள் யாவரும் இதுவே பாடமாகத்தான் எழுதி வருகிறார்கள். அணுவளவும் பேதமில்லை; ஆகவே ராமாநுஜ தயாபாத்ரத்தை அங்கிகரிப்பவர்கள் யாவரும் தேசிக நியமனமாக மேற்கூறிய தனியன் வ்யவஸ்தையை ஒப்புக்கொண்டே தீரவேணுமென்பது சிலாலிகிதம்.

இதனால் என்ன தீர்ந்தது என்னில்; தமிழ்ப் பாஷையிலோ மணிப்ரவாள பாஷையிலோ தேசிக க்ரந்தங்கள் காணப்படுமாகில் அவற்றில் ஒரு தனியனும் இல்லாமலிருக்குமானால் விசாரமேயில்லை. முகப்பில் தனியன் எழுதப்பட்டிருந்து அது இவர்கள் சொல்லுகிற பாத்திரத்தனியனல்லாமல் ஸ்ரீமாந் வேங்கட தனியனாகவே காணும் பக்ஷத்தில் இவர்கள் எழுதியிருக்கின்ற கதை யெல்லாம் கட்டுக்கதையே யென்று நிஷ்கர்ஷிக்க வேண்டுமெனத் தீர்ந்தது. இவ்வொருவிஷயத்தையே நன்கு விமர்சிக்கவேணும். அந்த தமிழ்க்ரந்தங்களை ஓலையில் எழுதும்போது எவ்வண்ணம் எழுதியிருக்கவேண்டும்? சிலர் ஒரு தனியனையும் எழுதாமல் [ஸ்ரீரஸ்து இத்யாதிகளுங்கூட எழுதாமல்] க்ரந்தத்தையே தொடங்கி எழுதுவதுண்டு. அப்படியும் சில ஓலை ஸ்ரீகோசங்கள் இருக்கின்றன. அவற்றைப்பற்றி நமக்கு விசாரமில்லை. தனியன்

எழுதப்பட்டு **ஸ்ரீமாந்வேங்கட நாதார்ய:** என்றே யிருந்து விட்டால் அதற்கு இவர்கள் பதில் சொல்லியேயாகவேண்டு மல்லவா? தேசிகரஹஸ்யங்கள் தமிழ்லிபியிலும் தெலுங்கு லிபியிலும் எத்தனைபதிப்பு ஏறியிருக்கின்றன. அவற்றில்—ஸமீபகாலப் பதிப்புகள் தவிர பழையபதிப்புகளில் ஒன்றிலாது பாத்திரத்தனியனுண்டோ? பார்க்கட்டுமே; எடுத்துக்காட்டட்டுமே.

22. சென்னை கடற்கரையிலுள்ள கவர்ன்மெண்டு ஓரியண்டல் லைப்ரெரியில் அபாரமான ஓலை ஸ்ரீகோசங்கள் சேமித்து வைத்திருக்கிறார்களென்பது ப்ரஸித்தம். பொய்பாகவோ மெய்யாகவோ யார் யார் எங்கெங்கு எது எது எழுதிவைத்திருக்கிறார்களோ அதெல்லாம் பெரும் பாலும் அந்த லைப்ரெரியில் சேர்க்கப் பட்டிருக்கிறது. அங்கு யார் சென்று எந்தப் புத்தகத்தைக் கேட்டாலும், பார்க்க உடனே நிராக்ஷேபமாக எடுத்துத் தருகிறார்கள். தேசிகப் பிரபந்தங்கள் தேசிக ரஹஸ்யக்ரந்தங்கள் அநேகம் பிரதிகள் அங்குக் காணக்கிடக்கின்றன. அநாயாஸமாகச் சென்று காணலாம்.

23. "H 13 14. நெம்பருள்ள ஓலைப்புத்தகம் தேவை"—என்று தெரிவித்தால் உடனே தேசிகப்ரபந்த ஏட்டுப்பிரதி கிடைக்கும். அதில் **ஸ்ரீமாந்வேங்கட நாதார்ய:** என்கிற ச்லோகம் பூர்த்தியாக எழுதப்பட்டு ப்ரபந்தாரம்ப முள்ளது காணலாம். ப்ரகாந சதகம் பரமத பங்கம் ரஹஸ்ய சிகாமணி ரஹஸ்ய நவநீதம் ரஹஸ்ய பதவி, ரஹஸ்ய மாத்ருகா ரஹஸ்ய ரத்நாவளீ ரஹஸ்ய ஸந்தேசம் ஸம்ப்ரதாய பரிசுத்தி ரஹஸ்ய த்ரயஸாரம் ஸாரஸாரம் என்றிப்படி பலபல தேசிக க்ரந்தங்கள் தனித்தனி புத்தகமாக அந்த கவர்ன் மெண்டு லைப்ரெரியில் உள்ளன. இவற்றில் ஒவ்வொன்றிலும் ஸ்ரீமாந் வேங்கட தனியன் ஒன்றேயுள்ளது. நூதன பாத்ரத்தனியன் இவற்றில் இடம் பெறுததற்குக் காரணம் பிராமாணிகர்கள் அவசியம் நிரூபிக்கவேண்டும். தேசிகனுடைய நியமனத்திற்கு மாறாக அத்தனை ஓலை ஸ்ரீ கோசங்கள் எழுதி வைத்தது யார்? முன்னம் அந்த லைப்ரெரிக்குச் சென்று, இதில் நாம் தெரிவித்திருக்கிறபடியே உள்ளதா இல்லையா என்பதைக் கண்டறிந்துகொண்டு பிறகு நிரூபணத்தில் கைவைக்கலாம். தேசிகனுடைய நியமனப்படி நூதனபாத்திரத் தனியன் ஏறியுள்ள ஓலை

ஸ்ரீ கோசம் லைப்ரெரிகளிலோ வேறு இடங்களிலோ ஒன்றுகூட கிடையாதென்பதை நாம் சபதம்பண்ணியன்றோ தெரிவிக்கிறோம்.

24. ஸ்ரீ தேசிகனுடைய வைபவ ப்ரகாசிகையென்று ஒரு க்ரந்தம் அச்சிட்டிருக்கிறார்களல்லவா; இதில்தானே ராமாநுஜ பாத்ர விஷயமும் எழுதியிருக்கிறார்கள்; அதை மூலமாகக் கொண்டு தானே பின்புள்ளார்கள் இந்த பாத்திரவிஷயம் எழுதிவருகிறார்கள். அந்த வைபவ ப்ரகாசிகாக்ரந்தமும் முற்குறித்த கவர்ன்மெண்டு லைப்ரெரியில் இருக்கின்றது. R. No. 104 H. 38. 14" என்று நம்பர் சொன்னால் அந்தஓலைப்புத்தகத்தை உடனே யெடுத்துத்தரு வார்கள் பார்க்கலாம். ஷை தனியன் விஷயமான ப்ரஸ்தாவலேசமும் அதில் கிடையாது. ஒவ்வொருவரும் அநாயாஸமாகத் தாமே கட் கூடாகக் காணலாமே.

25. ஷை ஓலைப்புத்தகத்திலும் கல்பனைக் கதைகள் சில உள்ளனவாகிலும் இந்த நூதன பாத்ரக் கல்பனைக்கதை இதில் புகவில்லை என்பதற்காகவே இதனை இங்கு எடுத்துரைத்தோம். ஒவ்வொரு காலத்தில் ஒவ்வொரு கல்பனை ஏறி வருகிற தென்பது தான் நன்கு விளங்குகின்றது. அந்த லைப்ரெரியிலேயே தென்னு சார்ய ஸம்ப்ரதாய க்ரந்தங்கள் பலபலவுள்ளன. அவற்றில் ஸ்ரீசை லேசதயா பாத்ரம் என்கிற ஆரம்பம் இல்லாத ஓலையேடுகள் இல்லை. **தனியன் புத்தகம்** என்றும் **வாழிதிரு நாமங்கள்** என்றும் பல தொகுதிகள் லைப்ரெரி தோறும் இருக்கின்றன; அவற்றையும் கண்ணாரக் கண்டாலன்றோ தத்துவம் நெஞ்சிற்பதியும். ... *

---

## —இரண்டாமதிகாரம்—

### ராமாநுஜ தயாபாத்ரத்தைப்பற்றி யெழுதியுள்ள கதைகள் சிறிதும் பொருந்தாதவை யென்பதை ஸாரமாக இனி நிரூபிக்கிறோம்.

26. ஆரியர்காள்! "இரண்டு தனியன்களில் எதை நாங்கள் வைத்துக்கொள்வது?" என்று அக்காலத்திலேயே சிஷ்யர்கள் தேசிகரைக் கேட்டதாகவும் அதற்கு தேசிகர் ஏதோ வ்யவஸ்தைபண்ணித் தந்ததாகவும் எழுதினார்களே! அதை ஒழுங்காக எழுதிவைக்க அந்தோ! அறிந்திலர். *"ஸ்ரீமாந் வேங்கடதனியனை உபய வேதாந்த ரஹஸ்ய க்ரந்த காலக்ஷேபங்

களுக்கு வைத்துக்கொள்ளுங்கோள்; *பாத்திரத்தனியனை ஸந்நிதிகளில் சண்டைகளுக்கு வைத்துக்கொள்ளுங்கோள்" என்று தேசிகர் நியமித்தருளினதாக எழுதி வைத்திருந்தால் எவ்வளவோ அழகாயிருந்திருக்குமே. அப்போது நாம் ஓலை ஸ்ரீ கோச ஆராய்ச்சியை ப்ரஸ்தாவிக்கவே இடமிராதே. "தேசிகர் அங்ஙனம் நியமித்தார் என்பதை ஓலையேடுகளில் காட்ட முடியுமா?" என்கிற ஒரு கேள்வியோடே நின்றிருக்குமே. அதற்கு ஒன்றிரண்டு ஏடுகளை இரண்டொரு நாளில் ஸித்தப்படுத்திப் புராதனமாக்கிக் காட்டியும் விடலாமே. இல்லாத வொருதனியனுக்கு, இல்லாத கதைகளைக் கட்டினதானது பொய்யை ஊர்ஜிதப்படுத்தியதே தவிர வேறொரு பலனையும் பெறுவிக்கவில்லையே.

27. விவேகிகாள்! ப்ரஹ்மதந்த்ர ஸ்வதந்த்ர ஸ்வாமி தாம் பகவத்விஷயமதிகரித்தபோது நூதன பாத்ரத்தனியனைத் தாம் ஸ்ருஷ்டித்துத் தாம் அநுஸந்தித்ததாக இவர்கள் எழுதியிருப்பதே கட்டுக்கதையென்று சிலாலிகிதமாயிற்று. அது எப்படியாவது இருக்கட்டும். 'எந்தத்தனியனை அநுஸந்திப்பது?' என்று தேசிகரிடம் சென்று சிஷ்யர்கள் கேட்க வேண்டியகாரணம் என்னே? இங்ஙனம் கேட்டார்கள் என்கிற வார்த்தையே அசடுதட்டிக் கிடக்கவில்லையா? இரண்டு ச்லோகங்களையும் சேர்த்தே அவர்கள் அநுஸந்தித்துக் கொண்டால் என்ன முழுகிப்போய்விடும்? ஸ்ரீராமாயணாதிகளில் வால்மீகி முதலானவர்களைப்பற்றிப் பலபல துதிகள் அநுஸந்தித்து வரவில்லையோ? திருக்கச்சிநம்பிகளின் தேவராஜாஷ்டகத்திற்கு முன்னே இரண்டு ஸ்துதிபத்யங்கள் அநுஸந்தித்து வரவில்லையோ? ஸ்தோத்ரரத்நத்திற்கு முன்னே ***ஸ்வாதயந்நிஹ*** நமோநமோ **யாமுநாய*** நமோயாமுந* என மூன்று அநுஸந்தித்து வரவில்லையோ? ***அவிதிதவிஷயாந்தர:*** வேறொன்றும் நானறியேன்* இத்யாதிகளும் பலவுண்டே; இப்படியிருக்க, எந்த ச்லோகத்தை யநுஸந்திப்பது? என்கிற கேள்வியே அஸங்கதமாக இல்லையா? அதற்குமேல், பாத்ரத்தனியனை தேசிகர் மிகவும் கொண்டாடினார் என்பது ஹாஸ்யமாக இல்லையா? அவர்தாமே ஒரு நிபந்தனை பண்ணித்தந்தாரென்கை பரமஹாஸ்யமாக இல்லையா? அந்த நிபந்தனையின்படி ஒருவர்கூட நடத்திவரவில்லையென்பது அவரவர்கள் வெளியிட்டுருக்கின்ற தனியன்

புஸ்தகங்களாலும் லைப்ரெரிகளிலுள்ள ஓலைப்புத்தகங்களாலும் கல்வெட்டாகத் தேறிநின்றதே! இது சோசநீயமாக இல்லையா? வேதாந்த தேசிகவைபவ ப்ரகாசிகையில் இந்த பாத்ரத்தனிய னுடைய பேச்சே இல்லாமலிருப்பது எவ்வளவோ உண்மையைக் காட்டிவிடுகிறதே. ப்ரஹ்மதந்த்ர ஸ்வாமி நயனாசார்யரோடு கூடவே தேசிகனிடத்திலேயே பகவத் விஷயமதிகரித்தாரென்று அதில் வெளிவந்து விட்டபடியால் இவர்களினுடைய கல்பனை முழுதும் ஆகாசப்பந்தலாக முடிந்துவிட்டதன்றோ. ஒரு பொய்யை ஸ்தாபிக்க எத்தனை பொய்கள் கிளம்புகின்றன பாருங்கள். முடிவில் எல்லாம் பொய்யே.

28. அன்றியும், தேசிகர் கொண்டாடும்படியான விசேஷம் இந்த நூதன பாத்திரத்தில் என்ன இருக்கிறது என்பதை மேதாவிகள் சிறிது விமர்சிக்கலாகாதா? ஸ்ரீமாந் வேங்கட **நாதார்ய:** என்கிற பரமகம்பீரமான பத்யாத்நத்தைக் கேட்ட காதுகளுக்கு இந்த பாத்ரச்லோகம் எப்படியிருக்கிறது என்பதை அவரவர்கள்முள்ளம் உணரமாட்டாதா? விலக்ஷணமான அந்தத் தனியனில் ப்ரஹ்மதந்திரஸ்வாமி அத்ருப்தியடைந்து வேறு தனியன்பணிக்க நினைத்தார் என்கிற வார்த்தையே அருவருக்கத் தக்கதாக இல்லையா? அவர் அங்ஙனம் பணிக்க நினைத்தது வாஸ்தவமாக இருந்தால் ஸ்ரீமாந் வேங்கடதனியனைப் பலபடியா லும் வென்றதாகவன்றோ புதுத்தனியன் பிறந்திருக்கும். தேசிகன் ஸ்வாசார்யரான அப்புள்ளாருக்கு அருளிச்செய்துள்ள * **யஸ்மாத ஸ்மாபிரேதத் யதிபதிகதிதப்ராக்தந ப்ரக்ரியோத்யத்** * என்கிற ச்லோகத்திற்குத் தோள் தீண்டியாகவன்றோ தோன்றி யிருக்கவேணும் அப்படியில்லாமற்போனாலும் ***ஸ்ரீமத்ராமாநுஜ குருந்ருபா பாத்ர மாச்சர்ய சிலம்*** என்றிப்புடைகளிலே சொல் நிரம்பவும் பொருள் ததும்பவும் பணித்தாலன்றோ ஸ்ரீமாந் வேங்கடதனியனில் விஞ்சியதாக ஆகும். அதுவன்றோ தேசிகரும் உண்மையில் உகக்கும்படியானதாகும்.

29. தேசிகனுக்குண்டான ஆசார்ய கடாக்ஷப்பெருமையை ஸ்ரீமாந்வேங்கடதனியன் சிறிதும் காட்டவில்லையென்றும் அந்தப் பெருமையைப் பேசுவதற்கென்றே நூதனதனியன் பிறந்ததென்றும் கூசாமல் எழுதிவைத்திருப்பது பொருந்தவேண்டுமானால், தேசிகர்

அதிகரணஸாராவளியில் தம்மைப்பற்றி ஸாதித்துக்கொண்ட * **ஸ்ரீமத்ப்யாம் ஸ்யாதஸாவித்ய நுபதி வரதாசார்ய ராமாநுஜாப்யாம் ஸம்யக் த்ருஷ்டேந** * என்கிற ச்லோகத்தின் சாயையிலன்றோ அமைந்திருக்கவேண்டும். குறை தீர்க்கவந்த தனியன் அநுஷ்டுப்பாகவா பிறந்திருக்கும் ? பலகுறைகளுக்கு ஹேதுவுமாயிற்றே ! அசட்டுத்தனம் வழிகிறதே !.

30. அன்றியும், பகவத்விஷய காலக்ஷேபத்திற்காகவே இந்த பாத்திரத்தனியன் இடப்பட்டது என்கிறார்களே ; அப்படியானால், பகவத் விஷயத்தில் தேசிகருக்குள்ள அவகாஹநத்தையும் ஆற்றலையும் சிறிதாவது காட்டியல்லவோ இத்தனியன் பிறந்திருக்கவேணும். அந்நாள் தொடங்கியே ஆஸேதுஹிமாசலம் பெருமேன்மைபெற்றுப் பொலிந்து வருகின்ற **ஸ்ரீசைலேச தயாபாத்ர** தனியனுக்குப் போலியாயிருக்க வேணுமென்கிற எண்ணமே கொண்டு அதன் சாயலாகவே தொடுக்கப்பட்டிருக்கிறதென்பது நன்றாகத் தெரியவில்லையா ?

## ஸ்ரீசைலேச பாத்திரத்திற்குப் பிரதியாகவே ராமாநுஜ பாத்ரம் கல்பிக்கப்பட்டதென்பதைப் பரக்க நிரூபிக்கிறோம்.

31. "ராமாநுஜ தயாபாத்திரத் தனியனைப் பார்த்தே ஸ்ரீசைலேசதயாபாத்ரத் தனியன் ஸ்ருஷ்டிக்கதாகக் கொள்ளலாகாதோ?" என்று ஸாஹஸமா பிறர் பேசவுங்கூடும். கேண்மின் ! தேசிகருக்கு வேறொரு தனியன் இல்லாமலிருந்து இந்த பாத்திரத்தனியனொன்றே யிருக்குமாகில், இதுதானும் திவ்யதேசங்களிலும் க்ரந்தகாலக்ஷேபாதி பரம்பரையிலும் வீறுபெற்று வந்திருக்குமாகில் இதைப்பார்த்தே ஸ்ரீசைலேச தனியன் தொடுத்தது என்று நாமே ஸித்தாந்தம் செய்யத் தடையிராது. கீர்த்தி மூர்த்தியான பெங்களூர். (வடகலை) தூப்புல் வேங்கடாசாரியாரென்பவர் ஸகல ஸ்தோத்ரங்களையும் ஒன்று சேர்த்துப் பதிப்பித்தபோது ஸ்ரீதேசிக ஸ்தோத்ரங்களின் தலையில் ஸ்ரீமாந் வேங்கடதனியனைப் பதிப்பித்து ; ஸ்ரீவரவரமுநி, தச்சிஷ்ய ஸ்தோத்ரங்களின் தலைமேல் * **ஸ்ரீமாந் ஸ்ரீரங்கநாதார்ய: வேதாந்தத்வயகேஸரீ, முநி: காந்தோபயந்தா மே ஸந்நிதத்தாம் ஸதாஹ்ருதி** * என்றொரு ச்லோகத்தைப் பதிப்பித்தார். அதைக்கண்டு மற்றுஞ்சிலரும் அங்ஙனே

பதிப்பித்தார்கள். இந்த ச்லோகத்தைச் சிலர் சிந்தனை செய்யவும் சொல்லவும் தொடங்கினார்கள். இது போலித் தனியன் என்பதை நிரூபித்து நாமே இதன் பிரசாரத்தைத் தடுத்திருக்கிறோம். எந்த விஷயத்திலும் நிஷ்பக்ஷபாதமாகவே நாம் ப்ராமாணிகார்த்த ப்ரதிஷ்டாபநம் செய்வோமென்பதற்கு இது சான்று.

32. ஒரு காலத்திலும் ஒரு திவ்யதேசத்திலும் ஒரு குறைவும் பெறாத ஸ்ரீசைலேசத் தனியனைப் போலித்தனியனுக்கப் பாடு படுவதெல்லாம் அதற்குள்ள பெருமையை ப்ரதிஷ்டாபநம் செய்வதிலேயே பர்யவஸித்து நிற்கும். வேதத்தில் சிலவிடங்களில் தேவர்களின் பராஜய கதையும் வருவது போலே சிலதிவ்ய தேசங்களில் சிலநாளாக நேர்ந்திருக்கும் நெறிதவறின நிலைமை எம்பெருமானுடைய லீலைகளிலே ஒன்று என்றே கருதத்தக்கது. அந்த சில ஆலயங்களில் நூதன பாத்ரத் தனியன் வந்தேறின நாளை ஒரு நொடிப்பொழுதில் கண்டுபிடிக்கக் குறையில்லையன்றோ? எவ்வுள்கிடந்தான் ஸன்னிதியில் ஸ்ரீமத் அஹோபிலம் ஸ்வாமிகள் ஸ்ரீசைலேசத் தனியனைத்தொடங்கிவந்த முறைமையை மாறுபடுத்த ஆரம்பித்ததும் அதற்காக அவர்க்கு நேர்ந்த கஷ்டங்களுமெல்லாம் நாளைக்கும் ரிகார்ட்டுகளில் அழிந்திலவே. அவற்றில் சில ரிகார்டுகள் அச்சிட்டு வெளியிடப்பட்டேயுள்ளன.

33. எதற்குப் போட்டியாக எது கல்பிதம் என்பதை இன்னமும் எளிதாகவும் அவிசால்யமாகவும் நன்கு நிலை நாட்டிவிடுகிறேன். இந்த பாத்ரத்தனியனோடு கூட [உத்தர சாந்தி யென்கிற வாழித் திருநாம ப்ரகரணத்தில்] தேசிகருடைய ஆசார்யரான அப்புள்ளார்க்கும் ஒரு தனியன் ஏற்பட்டிருக்கிறது. அதாவது **நமோ ராமாநுஜார்யாய** என்பது. மணவாள மாமுனிகளின் ஆசார்யரான திருவாய்மொழிப் பிள்ளைக்குத் தனியனாக அநுஸந்திக்கப்பட்டு வருகின்ற **நம: ஸ்ரீசைலநாதாய** என்கிற ச்லோகத்திற்குப் பிரதியாகத் தோன்றினது இது. அந்த ச்லோகம் **கைங்கர்ய சாலிநே** என்று முடிவாகிறது. இந்த ச்லோகம் குணசாலிநே என்று முடிவாகிறது. **நம:** என்றதைப் பார்த்து **நம:** என்பது; **வந்தே** என்பதைப் பார்த்து வந்தே என்பது; இப்படியாகவே ஒரு ஸ்ருஷ்டி ஏற்பட்டிருக்கிறது. பிராமாணிகர்காள்! இங்கு ஆராய்ச்சி செய்மின். அப்புள்ளார்க்கு இந்தத்தனியன்

உண்மைதானு? அவருக்கு தேசிகனருளிச்செய்த தனியன் **யஸ்மாதஸ்மாபி:** இத்யாதியாப் ஆச்சர்யமான பெரிய ச்லோக மன்ரே உண்மையானது. எந்த க்ரந்த பரம்பரையிலும் அதுதான் அநுஸந்திக்கப்பட்டு வருகிறதென்பது நிர்விவாதம். அப்படிப் பட்ட அற்புதமான தனியனை விட்டு வேருன இந்த அநுஷ் டுப்பை தேசிகரே ஸாதித்தார் என்கிறூர்களே; எதற்காக அவர் இதை ஸாதிக்கவேணும்? "நம: **ஸ்ரீசைலநாதாய** என்பதைப் போலவே அநுஷ்டுப்பாகவே நம் ஆசார்யருக்கும் இருக்க வேணும்" என்று கருதியா ஸாதித்தார்? ஸ்ரீமாந் வேங்கட தனியனிலுண்டான குறையைத் தீர்ப்பதற்காகப் பாத்ரத்தனியன் பிறந்தது என்றுப்போலே, **யஸ்மாதஸ்மாபி**: என்று தாமே முன்பு ஸாதித்த தனியனிலுண்டான குறையைத் தீர்ப்பதற்காகத் தாமே இந்த அநுஷ்டுப்பு ஸாதித்தார் என்று சொல்லித்திர வேண்டுமே? வேறு என்ன சொல்லுகிறீர்களோ சொல்லுங்கள்.

34. இங்கே முக்கியமாக கவனிக்கவேண்டியதாவது; வாழி திருநாமத்தில் ஸ்ரீசைலேச தயாபாத்ரத் தனியனுக்கு முன்பு மணவாள மாமுனிகளின் ஆசார்யரான திருவாய்மொழிப் பிள்ளை யின் தனியன் (நம: **ஸ்ரீசைலநாதாய**) என்கிற ச்லோகம் சொல் லப்பட்டு வருகிறது. இதைப் பார்த்து இதேஸ்தானத்தில் தேசிக ருடைய ஆசார்யரான ராமாநுசப்பிள்ளானுக்கு (நமோ ராமாநு ஜார்யாய) என்ரெரு புதுத் தனியன் செய்து அதையும் சேர்த்துக் கொண்டார்கள். (நம: ஸ்ரீசைலநாதாய) என்கிற திருவாய் மொழிப்பிள்ளை தனியனுனது கோவில்களில் மாத்திரம் வழங்குவ தன்று; ஸமாச்ரயண பரம்பரை, க்ரந்த பரம்பரை ஆகிய எதிலுமே அந்தத் தனியன்தான் உள்ளது; வேறு தனியன் கிடையாது. தேசிகருடைய ஆசார்யரான ராமாநுசப்பிள்ளானுக்கு உண்மை யான தனியன் (நமோ ராமாநுஜார்யாய) என்கிற இதுவல்ல. (**யஸ்மாதஸ்மாபி:**) என்று தொடங்கி மிகப் பெரிதாயிருக்கின்ற தனியன் வேறு உள்ளது. அதுதான் ஸமாச்ரயண பரம்பரை யிலும் க்ரந்த பரம்பரையிலும் செல்லுவது. அந்தத் தனியனை கோவில் சண்டைகளில் இவர்கள் சொல்லாமைக்குக் காரணம் என்னவென்றுல், அது பெரிய ச்லோகமாயிருப்பதால் (**நம: ஸ்ரீசைலநாதாய**) என்கிற சிறிய ச்லோகத்தோடு சேர்க்கச்

சேராமையாலே வேற்றுமை நன்ருக வெளியாய் விடுமென்றே அதை விட்டார்கள். இப்படி ஒவ்வொன்றும் நவீந கல்பனை யென்பது ஸ்பஷ்டமாகிறது. மேலே எல்லாவித மர்மங்களும் ஒன்று விடாமல் வெளிவரும்.

35. அடுத்தபடியாக மற்ருெரு விநோதமும் கேண்மின்; வடமொழித் தனியன்களின் செய்தி இதுவாயிற்று. இனித் தென் மொழிவாழித் திருநாமங்களில் புகுந்து பார்ப்போம்.

A. வாழி திருவாய்மொழிப்பிள்ளை மாதகவால்வாழும்.
B. வாழியிராமாநுசப்பிள்ளான் மாதகவால்வாழும்.
(இவை உபய வெண்பாக்களின் ஆரம்பம்.)

A. தேறும்படியுரைக்கும் சீர். B. தேறும்படிரைக்கும் சீர்.
(அந்த வெண்பாக்களுக்கு இருவருடையமுடிவும் இதுவே.)
போட்டியாகப் பிறகு கல்பிதம் எது? என்பதைக் கண்டுபிடிக்கும் வழி கேண்மின்.

"தேறும்படி மாறன் மறைப்பொருளை மணவாள மாமுனிவன் உரைக்கும் சீர் வாழி" என்கிறது முந்தின வெண்பா. "தேறும்படி மாறன் மறையும் இராமாநுசன் பாஷ்யமும் நிகமாந்த குரு உரைக்கும் சீர்வாழி" என்கிறது பிந்தின வெண்பா. தேறும்படி என்கிற வாசகம் இரண்டிலுமுள்ளது. அதற்கு என்ன பொருள் தெரியுமா? 'கடைத்தேறும்படி' என்று பொருள். யார் கடைத் தேறும்படி? என்று ஆகாங்க்ஷையுண்டாகியே தீரும். எழுவாய் அவசியம் வேண்டும். முந்தின வெண்பாவில் "மாநிலத்தோர் தேறும்படி" என்றுள்ளது; பிந்தின வெண்பாவில் எது எழுவாயென்று வினவினுல் எழுவதற்கு வாயில்லையே.

35. "எழுவாய் இல்லாவிட்டாலென்ன? அர்த்தாத் ஸித்திக்கமாட்டாதோ? இது வொரு விஷயமா!" என்று பிறர் இலேசாகச் சொல்லிவிடக்கூடும். மத்யஸ்தரான தமிழ்ப் புலவரிடத்திலே இரண்டு வெண்பாவையும் தந்து, "எந்த வாக்கு ஸ்வரஸமாக அவதரித்தது? எந்த வாக்கு பிரதியாகத் தோன்றினது? சொல்லவேணும்" என்று கேட்டால் அப்போதன்றே இந்த நமது நிரூபணத்தின் சுவை புலனுகும். சூதுகளை மருமத்தில்

கண்டுபிடிக்க வல்ல ஆராய்ச்சியாளர் உலகில் இல்லாமற் போக வில்லை. இரண்டு வெண்பாக்களிலும் இலக்கணப்படி சீர்பிரித்துப் பாருங்கள் ; முந்தினதில் [வாழி—திருவாய்—மொழிப்பிள்ளை—மாதகவால், வாழும்—மணவாள—மாமுனிவன்] என்று அழகாகச் சீர்பிரிகிறது. பிந்தினதில், [வாழி—யிராமா—னுசப்பிள்ளான்,... வாழு—மணிநிக—மாந்தகுரு] என்று சீர்பிரிகிறது. 'எப்படிப் பிரிந்தாலென்ன ? இதுவொரு குற்றமோ ? என்பர்கள். னுசப் பிள்ளான் என்றும், மாந்தகுரு என்றும் சீர் உடையும்படி வெண் பாவாகவே வைத்துப் பாடவேண்டிய அவசியம் என்ன ? வேறு விருத்தத்தில் செவிக்கினிதாகப் பாடியிருக்கலாகாதோ ? முந்தினது [மாமுனிகளின் விஷயமானவது] வெண்பாவாகவே யிருந்த படியால் அந்த ஸ்தானத்தில் வேறு விருத்தம் இயற்ற இயலவில்லை என்று தானே உண்மையான பதில் வெளிவரவேண்டும். நிற்க.

37. முடிவில் அநுஸந்திக்கப்படுகிற **அடியார்கள் வாழ அரங்கநகர்வாழ** என்கிற வெண்பாவுக்குப் போட்டியாக இவர்கள் சொல்லுகிற **நானிலமுந்தான் வாழ** என்கிற வெண்பாவிலும் ஆராய்ச்சிக்கு விஷயம்வேண்டியதுள்ளது. இரண்டும் ஸ்ரீரங்கத்தில் அவதரித்தனவென்றே இருவகுப்பினரும் எழுதிவைத்துள்ளார் கள். இதற்குப் பொருந்தவும், **ஸ்ரீமந்!** ஸ்ரீரங்கச்ரியமநுபத்ர **வாமநுதிநம் ஸம்வர்த்தய** * என்ற வடமொழி வாழ்த்துக்குப் பொருந்தவும் ஸ்ரீரங்க ஸாம்ராஜ்யத்திற்கு வாழ்த்துப் பாட வேண்டியது ப்ராப்தம். அப்படியே **அரங்கநகர்வாழ** என்று முந்தின வெண்பாவிலுள்ளது. போட்டியான வெண்பாவில் ஒரு ஊரைப் பற்றியும் பேசாமலே யிருந்துவிட்டால் கேள்வியில்லை. **அரங்கநகர் வாழ** என்றதைப் பார்த்து நாமும் ஒரு நகர்ப்பதம் இட்டுவைப்போ மென்றெண்ணியல்லவோ (பிந்தின வெண்பாவில்) **மாநகரில்** என்று இட்டு வைத்தார்கள். இதற்கு என்ன அர்த்தம். அநர்த் தமே அர்த்தம் போலும். மாநகர் என்று ஓர் ஊரில்லை. ஆனால் ஸம்ப்ரதாயத்தில் தென்திருப்பேரைக்கு **மாநகர்** என்று ப்ரஸித்தி யுண்டு. "தென் திருப்பேரெயில் மாநகரே" என்கிற திருவாய் மொழியும் "**மாநகரிலே கோஷிக்கும்**" என்கிற ஆசார்யஹ்ருதய திவ்யஸூக்தியும் முதலியன இதில் ப்ரமாணம். அந்தத் திருப் பதிக்கு இந்த வாழிதிருநாமத்தில் என்ன ப்ரஸக்தி ? 'அரங்கநகர்

வாழ' என்று ஏற்கெனவே பாசுரம் அவதரித்திருந்தபடியால் அவ்விதமாகவே தாங்களும் பாசுரம் கூட்டக் கூசி 'மாநகர்' என்று ஏதோ பேசிவைத்தார்கள்—என்பதுதான் தத்துவமாகத் தேறும்.

38. மாமுனிகளின் வாழி திருநாமத் தொடக்கத்தில் "மாறன் திருவாய்மொழிப் பொருளை" என்று [பிரகரணாநுகுணமாக] திருவாய்மொழியை மாத்திரம் எடுத்ததற்குச் சேர, முடிவு வெண்பாவிலும் * சடகோபன் தண்டமிழ்நூல் வாழ * என்று திருவாய்மொழிக்கு மாத்திரமே வாழ்த்து கூறியிருப்பது மிக்க பொருத்தம். போட்டியான வாழி திருநாமத் தொடக்கத்தில் "மாறன் மறையுமிராமாநுசன் பாஷியமும்" என்று ஸ்ரீபாஷியத்தையும் சேர்த்து எடுத்திருக்கிறது; இதற்குச் சேர முடிவிலும் "மாநகரில் மாறன் மறையும் பாஷியமும் வாழ" என்றிருக்கவேண்டுமே. இல்லையே. "இப்படி என்ன நிர்ப்பந்தம்!" என்கிற க்ஷேபோக்தியினால் வெற்றி பெறலாமென்கிற எண்ணம் மாத்திரம் வேண்டா. வெண்பா அவ்வளவுக்கு இடம் தரவில்லை என்னுங்கோள். வெண்பாவாகவே யிருக்க வேணுமென்று என்ன அவசியம்? மாமுனிகளுக்காக அவதரித்தது வெண்பாவாக இருக்கிறபடியால் [அந்த கோஷ்டியில் கலந்து வேற்றுமை காட்டாமல் ஸேவிப்பதற்குப் பாங்காக] எங்களுக்கும் வெண்பாவே அமைய வேண்டியதாயிற்று—என்று சொல்லித்தீரவேண்டியது தவிர வேறென்ன வுத்தரமுள்ளது.

39. அநுஷ்டுப்புகளின் ஸ்தானத்திலே அநுஷ்டுப்புகளும், தயாபாத்ரம்—வந்தே—நம:—சாலிநே என்கிற பதவிந்யாஸங்கள் மாறுதபடி அப்படியப்படியே அவைகளும், வெண்பாக்களுக்கு வெண்பாக்களும், ஆசிரியத்திற்கு ஆசிரியமும், தேறும்படியுரைக்குஞ் சீருக்குத் தேறும்படியுரைக்குஞ்சீரும் ஆகவிப்படி மாறும்படி யுரைக்குஞ்சீர் சிறிதுமின்றித் தொடுக்கப்பட்டிருக்கிற போக்கையும், திவ்ய தேசங்களுடைய நிலைமைகளையும், ஓலையேடுகளில் இவை ஏறாமலிருப்பதையும், நம்முடைய பல நன்னிரூபணங்களையும் ஒன்று சேர்த்து விவேகிக்க இவ்வுலகில் அதிகாரிகளில்லையா? ராமாநுஜ தயாபாத்ரம் பிறந்து 600 வருஷமாயிற்றென்று வாய் திறக்க இன்னமுமா கூசாதிருக்கின்றீர்கள்? நன்று நன்று. 600 வருஷம் ஆனது மெய்யே யென்பதை உலகமுகந்து கொள்ளு

மாறு, வசைமொழிகள் சிறிதுமின்றி ப்ராமாணிகமாக ஒவ்வொன்றுக்கும் உத்தர முரைத்து, நாம் மறுவாய் திறக்க வழியில்லாமே க்ரந்தமுகேந ஸ்தாபனம் செய்யவல்லாரில்லையே.

40. ஸ்ரீ ஸைலேசதயா பாத்ரத்தைப் பார்த்து 'பாத்ரமென்கிற பதத்தோடு கூடியே திவ்ய ப்ரபந்தாரம்பத் தனியன் இருக்க வேண்டும் போலும்' என்று க்ரஹித்து எத்தனை பாத்ரத் தனியன்களைக் கல்பித்திருக்கிறார்கள் தெரியுமோ? அஹோபில மடத்து ஸ்ரீ ஆதிவண்சடகோப ஸ்வாமி தனியன் இன்னதென்பது உலகப்ரஸித்தம். அதாவது ப்ரபத்யே நிரவத்யாநாம் என்கிற ச்லோகமே. இந்தத்தனியனையே ஸமாச்ரயண பரம்பரைகளிலும் க்ரந்த பரம்பரைகளிலும் நாளைக்கும் மடத்தார் ஸேவித்து வருகிறார்கள், தனியன் புஸ்தகங்களிலும் இதைத்தான் வெளியிட்டுள்ளார்கள். இவர்கள் ராமாநுஜ தயாபாத்ரத் தனியனை இழுத்துப்போட்டுக் கொள்ள ஆரம்பித்தபோது * கேசவார்யக்ருபா பாத்ரம் * என்று, தங்கள் ஸ்வாமியின் தனியனாக இன்னொரு பாத்ரத்தனியனையும் இயற்றிக் கொண்டார்கள். இவ்விரண்டு பாத்ரங்களில் எந்த பாத்ரத்தை முன்னே சொல்லுகிறது என்று சச்சரவு உண்டாகி, நாளைக்கும் சச்சரவிலேயே இருந்து வருகிறதாம். அஹோபில மடத்து சிஷ்ய க்ராமங்களில் முதலில் ஸ்ரீசைலேச தயா பாத்ரமே தொடங்கி வந்ததையும் பிறகு அதை அடியோடு தள்ளி ராமாநுஜதயாபாத்திரம்சேர்த்துக்கொண்டு அதையும்தள்ளினதையும், பிறகு [ஸபூத்த்யர்களோடு ஸந்தி பண்ணிக்கொள்ள வேண்டி] அதை மடத்துஸ்வாமியின் கேசவார்யக்ருபா பாத்திரத்திற்குப் பின்னாலே சேர்த்துக் கொண்டதையும், இன்னமும் ஒரு நியதியில்லாமலிருந்து வருவதையும் ஆராய்க. மடத்தார் அச்சிட் டிருக்கிற தனியன் புத்தகங்களை யெல்லாம் ஒன்று சேர்த்து நோக்கினால் வெகு விஷமங்கள் விசதமாகும். ராமாநுஜதயா பாத்ராதிகள் அடியோடு நுழையப்பெறாத புத்தகங்களையும், அவற்றை முன்னேயிட்டுப் பின்னால் மடத்துத்தனியன்கள் இட்ட புத்தகங்களையும், கேசவார்யக்ருபா பாத்ரத்தை முன்னே போட்டுப் பின்னே ராமாநுஜபாத்ரம் போட்ட புத்தகங்களையும் (இனிவரப்போகிற விலக்ஷணப்ரகார புத்தகங்களையும்) கண்ணாரக் கண்டு இப்படிப்பட்ட வித்யாஸங்கள் ஏற்படக் காரணம் யாது? என்று விமர்சித்தால், திருவெவ்வுளூர்

தேவஸ்தான ரிகார்டுகளையும் சேர்த்துப் பராமர்சித்தால் நல்ல தெளிவு உண்டாகியே தீரும். எல்லைகடந்த விஷமங்களல்லவா ?

41. அஹோபிலஸ்வாமிக்கு க்ரமமாக ஏற்பட்டிருக்கிற தனியன் வேறு ; இவர்கள் புதிதாகச் சொல்லிவருகிற பாத்ரத்தனியன் வேறு—என்பதை மத்யஸ்தர்கள் திண்ணமாக நெஞ்சிற் கொள்ளக் குறையில்லையே. இதில் வாய்திறக்கவும் வழியில்லையே. ஸந்நிதிகளில் இயல் தொடங்கும் போது ராமாநுஜாபாத்ரமே முந்துறச் சொல்லித் தொடங்கவேணுமென்று பகவதாஜ்ஞையும் ஆசார்ய நியமனமும் ஆனதாக கூசாமலிவர்களே எழுதியிருப்பது உண்மையாகில், இப்போது ராமாநுஜாபாத்ர அபிமானிகளாகக் காண்கிற மடத்தாரும் அந்தக் கட்டளையைப் பரிபாலித்து வரவேண்டாவா ? ராமாநுஜா பாத்ரம் சொல்லியான பிறகல்லவோ கேசவார்யக்ருபா பாத்ரம் பேசவேணும். ஒரு வ்யவஸ்தை யில்லாமல் மனம்போன போக்கில் நடந்து வருவதை அபலபிக்க முடியாதன்றோ. இவற்றால், இவ்வகுப்பினர் திவ்யப்ரபந்தாபிமானத்தை ஏற்றுக் கொண்டதும், கோவில்களிலும் க்ருஹங்களிலும் திவ்யப்ரபந்தம் ஸேவிக்கத் தொடங்கினதுமெல்லாம் நவீன கோலாஹலமே யென்பது குன்றிலிட்ட விளக்காகும்.

42. இப்போதும் வடகலை வகுப்பாரில் அஹோபில மடத்து சிஷ்யர்களே சிலபேர்கள் திவ்யப்ரபந்தம் கற்றவர்களாயும் அதில் அபிமானிகளாயும் காணப்படுகிறார்கள். இதற்குக் காரணம் தெரியுமோ ? இவர்கள் முன்பு தென்கலையா யிருந்ததுதான் காரணம் என்று திடமாகக் கொள்ளலாம். இதற்கு மேல் இவை யெல்லாவற்றுக்கும் சிகரமாக ஒரு விஷயம் தெரிவிக்கிறோம். இப்போது ராமாநுஜ தயாபாத்ரத் தனியனைப்பற்றி யிருப்பவர்கள் ஸ்ரீ ராமாநுஜர்க்கும் நம்மாழ்வாருக்கும் ஸமாச்ரயண பரம்பரையிலோ க்ரந்த பரம்பரையிலோ தனியனாகச் சொல்லி வருகிற ச்லோகங்கள் எவை ? என்று பாருங்கள். ***யோநித்ய மச்யுத பதாம்புஜ*** என்கிற ச்லோகத்தை ராமாநுஜருக்குத் தனியனாகவும், *மாதாபிதா யுவதய :* என்கிற ச்லோகத்தை நம்மாழ்வாருக்குத் தனியனாகவும் சொல்லி வருகிறவர்கள் தென்கலையார்களே. இத் தனியன்களை வடகலை வகுப்பினர் சொல்லுவதில்லை. அவர்கள்

* **ப்ரணமம் லக்ஷ்மணமுநி:** * என்கிற ச்லோகத்தை ராமாநுஜருக்குத் தனியனாகவும், * **யஸ்ய ஸாரஸ்வதம் ஸ்ரோத:** * என்கிற ச்லோகத்தை நம்மாழ்வாருக்குத் தனியனாகவும் சொல்லி வருகிறார்கள். அவர்கள் எந்த பரம்பரையிலும் * யோநித்ய மச்யுத ச்லோகத்தையும் * மாதாபிதா ச்லோகத்தையும் அறியார்கள். இதில் ஈஷத்தும் ஸந்தேஹமில்லை. அப்படிப்பட்டவர்கள் * ராமாநுஜ தயாபாத்ரம் சொல்லும்போது * யோநித்ய மச்யுத - மாதாபிதா ச்லோகங்களையே சொல்லி வருகிறார்கள். இந்த ச்லோகங்கள் இவர்களுக்கு எப்படி ப்ராப்தமாயிற்றென்று கேட்டால் என்ன சொல்லுவார்கள் தெரியுமோ? ஏற்கெனவே இந்தத் தனியன்களைத் தென்கலையார்கள் திவ்யப்ரபந்த ஸேவா காலங்களில் சொல்லிக்கொண்டு வந்தபடியாலும், இந்தத் தனியன்களில் எங்களுக்கு விரோதம் தோன்றாதபடியாலும் நாங்களும் இவற்றையே பிடித்துக் கொண்டோம் - என்றுதான் சொல்லுவர்கள். வேறொன்றும் வாய்திறக்க முடியாது. * லக்ஷ்மீநாத ஸமாரம்பாம் * பூதம் ஸரச்ச மஹதாஹ்வய * என்கிற ச்லோகங்களுங்கூட வடகலையாருக்கு ப்ராப்தமல்ல. அவைகளையும் இவர்கள் சொல்லி வருவதானது தென்கலையார்களைப் பின்பற்றியே யொழிய வேறில்லை. மேலே யெடுத்துக்காட்டிய ச்லோகங்களைத் தென்கலையார்கள் திவ்யப்ரபந்த ஸேவாகாலங்களில் மாத்திரம் சொல்லவில்லை; உபய வேதாந்த ரஹஸ்ய காலக்ஷேபங்களிலும் நியமேந இந்தத் தனியன்களைச் சொல்லிவருவதை எங்குங்காணலாம். வடகலை வகுப்பினர் இந்த ச்லோகங்களைக் கோவில் சண்டைகளுக்கு மாத்திரமே வைத்துக் கொண்டிருக்கிறார்கள் என்பது ஸத்யமான விஷயம். இதையும் கவனித்தால் இவர்கள் வந்தேறிகளே யென்பது கல்வெட்டாகும். இவர்கள் திவ்யப்ரபந்த கோஷ்டிகளில் புதிதாகவந்து சேரத் தொடங்கின போது தங்களுக்கு எந்தெந்த தனியன்களில் விரோதம் தோன்றவில்லையோ அந்தந்த தனியன்களை மாற்றாமல் வைத்துக் கொண்டார்கள்; விரோதம் தோன்றின தனியன்களில் விச்வாமித்ர ஸ்ருஷ்டி பண்ணினார்கள் - என்பது அசைக்க முடியாமல் தேறிநின்றது.

43. இனி, திவ்யப்ரபந்த சாத்துமுறை காலங்களில் தென்கலையார்கள் சொல்லுகிற சில ஸம்ஸ்க்ருத ச்லோகங்களை வடகலை

யார் மாற்றுமலே சொல்லி வருகிறார்களல்லவா? அதைப்பற்றியும் ஆராய்ந்தோமாகில் வெகு வேடிக்கைகள் தெரியவரும். அந்த ச்லோகங்கள் எவை யென்னில்;

" ஸர்வ தேச தசாகாலேஷ்வ அவ்யாஹத பராக்ரமா.
ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞா வர்த்ததாம் அபிவர்த்ததாம்.
ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞா ப்ரதிவாஸரமுஜ்ஜ்வலா.
திகந்தவ்யாபிநீ பூயாத் ஸா ஹி லோகஹிதைஷிணீ.
ஸ்ரீமந் ஸ்ரீரங்கச்ரிய மநுபத்ரவாம் அநுதிநம் ஸம்வர்த்தய.
ஸ்ரீமந் ஸ்ரீரங்கச்ரிய மநுபத்ரவாமநுதிநம் ஸம்வர்த்தய. "

என்கிற இந்த மூன்று ச்லோகங்களைத் தென்கலையார்கள் சொல்லி வருவது போலவே வடகலையார்களும் சொல்லி வருகிறார்கள். இந்த ச்லோகங்களில் தங்களுக்கு விரோதமில்லை யென்று நினைத்து இவைகளை விடாமலும் மாற்றுமலும் சொல்லி வருகிறார்கள். அந்தோ! இது இவர்களுடைய அசட்டுத்தனம் என்பதை இங்கே விரிவாக நிரூபிக்கிறேன்.

44. மேலேகுறித்த மூன்று ச்லோகங்களும் திவ்யப்ரபந்த ஸேவாகாலங்களில் சொல்லப்பட்டு வருகின்றதே யல்லது வேறு எந்த ஸந்தர்ப்பத்திலும் சொல்லப்படுவதில்லை. திவ்யப்ரபந்த சாத்துமுறைகளில் இந்த ச்லோகங்களைச் சொல்லுவது எதற்காக? என்பதைப்பற்றி ஒவ்வொருவரும் விமர்சிக்க வேண்டும். உண்மை யென்ன வென்றால், ஸ்ரீ ராமாநுஜருடைய காலத்திற்கு முன்பு திவ்ய தேசங்கள் ஒழுங்கான நிலைமையில் இல்லை; ஆங்காங்கு விசேஷமான சீர்திருத்தங்களைச் செய்தவர் ஸ்ரீ ராமாநுஜரே. * மன்னிய தென்னரங்காபுரி மாமலை மற்றும் முவந்திடுநாள் - திருவாதிரை நாளே * என்கிற நாள் பாட்டினாலும் இது விசதமாகும். ஸகல திவ்ய தேசங்களையும் சீர்திருத்தி ஆங்காங்கு திவ்யப்ரபந்தாதிகாரிகளையும் நியமித்துப் பலவகையான ஒழுங்குபாடுகளையும் செய்துவைத்தார். அதுதான் ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞையென்பது. அந்த திவ்யாஜ்ஞையைப் பரிபாலனம் செய்பவர்கள் யாவரும் தென்கலையார்களே யொழிய ஒருவரும் வடகலையில் இல்லை - என்பதை அடுத்த மூன்றுமதிகாரத்தில் வெகு விரிவாக நிரூபிக்கிறேன்.

இரண்டாமதிகாரம் முற்றிற்று.

---

## —மூன்றுமதிகாரம்—

45. வடகலை வகுப்பினர்கள் வெகுகாலம் வரையில் கோவில்களுக்கு வராதவர்களாகவேயிருந்து சண்டையாரம்பம் செய்வதற்காகவே பிற்காலத்தில் வரத் தொடங்கினார்களென்று முன்னே நாம் எழுதியிருப்பதை நிலைநாட்டுகிறோம் இவ்வதிகாரத்தில். திவ்ய தேசங்களெனப்படுகிற விஷ்ணுவாலயங்களோ, ஆழ்வார்களின் அவதாரஸ்தலங்களோ, ஸ்ரீமந் நாதமுனிகள் முதலான ஆசாரியர்களின் அவதாரஸ்தலங்களோ எல்லாம் அநாதிகாலமாகத் தென்கலை ஸம்பிரதாயமாகவே யிருந்து வருகின்றனவென்பது ப்ரத்யக்ஷம். கடலூர் ஜில்லாவில் திருவஹீந்திரபுரமென்கிற ஸன்னிதியும், தஞ்சாவூர் ஜில்லாவில் கும்பகோணம் முதலான 5, 6 ஸன்னிதிகளும், செங்கற்பட்டு ஜில்லாவில் திருவுள்ளூர் ஸன்னிதியும் ஆக ஏழெட்டு கோவில்கள் இப்போது வடகலை ஸம்பிரதாயமாக இருந்து வருவதுண்டு. குறிப்பிட்ட இக் கோவில்கள் வடகலையாகமாறி ஒருநூறு வருஷங்கூட ஆகவில்லையென்பது உலக மறிந்த விஷயம். இது வடகலையார்களே ஒப்புக் கொள்ளுவதுமாம். தஞ்சாவூர் ஜில்லாவில் 'திருக்கண்டியூர்' என்கிற ஸன்னிதியும், **தஞ்சை மாமணிக் கோயில்** என்கிற கோவிலும் நிகழும் இருபதாவது நூற்றாண்டில் தான் வடகலையாக்கப்பட்டதென்பது நாம் நன்கறிந்த விஷயம். எந்த இடங்களில் தென்கலையார்களின் குடியிருப்பு விசேஷமாக இல்லாமல் வடகலையாருடைய குடியிருப்பு ஆதிக்ய மடைகிறதோ அவ்விடங்களில் அவர்கள் கோவில்களை ஆக்ரமிக்கப்பார்ப்பதும் அதில் வெற்றி பெறுவதும் காண்கிறது. கி. பி. பத்தொன்பதாவது நூற்றாண்டின் பிற்பகுதியில் தான் இப்படி சில கோவில்கள் வடகலையாக மாறுவதற்கு ஆரம்பமாயிற்று. அஹோபிலமடமானது வெகுகாலம்வரை தென்கலையாயிருந்து வடகலையாக மாறின பிறகு அந்த மடத்தின் ஆதீனத்தைச் சேர்ந்த சில கோவில்களும் வடகலையாகத் தொடங்கி விட்டன என்பது தத்துவம். சில கோவில்களில் ஆராதகர்களான வைகாநஸர்கள் வடகலையார்களாயிருப்பதனால் அவர்களுடைய சில்விஷமங்களும் திருமண்பேதத்தையுண்டாக்குவதற்கு ஹேதுவாயிற்று. இப்படி பல ஹேதுக்கள் ஏற்பட்டன.

46. இவ்விஷயத்தில் வடகலையார்கள் ஆக்ரஹத்தோடு எதிர்வாதம் செய்யக்கூடும். அதாவது, இப்போது வடகலையாகக் காணப்படுகிற ஏழெட்டு கோவில்கள் இடையில் வடகலையானவையல்ல வென்றும், அநாதிகாலமாகவே வடகலையாயிருக்கின்றன வென்றும் வாதிக்கக் கூடும். இது மிகவும் அஸங்கதமான வாதம். இந்தவாதத்தை வடகலையார்கள் செய்யவும் மாட்டார்கள். ஒருகால் வீம்புக்காகச் செய்தார்களாகில் அப்போது அந்த கோவில்களைப் பற்றியுள்ள ரிகார்டுகளை நாம்வெளியிட்டு உண்மையை நிலைநாட்டுவோம். இப்போது வடகலையாய்ப் போனகோவில்கள் மறுபடியும் தென்கலையாகப் போகின்றன வென்று நாம் நினைக்கவில்லை, எதிர்பார்க்கவுமில்லை. பழைய நிலைமையையும் புதிய நிலைமையையும் உள்ளபடி தெரிவிப்பதற்காக மாத்திரமே இங்கு இதை யெழுதினோம். ஆழ்வார்களின் பாடல் பெற்ற கோவில்களில் முக்கால் பாகம் தென்கலையாகவே விளங்குகின்றன. அரைக்கால் பாகம் வடகலையாக மாறியிருக்கின்றன. அரைக்கால் பாகம் ஒரு திருமணு மில்லாமலிருக்கின்றன. அவை மலையாளத்திலும் வடநாட்டிலுமிருப்பவை.

47. நமது ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் ஆழ்வார்களும் ஆசாரியர்களும் முக்கியமானவர்கள். அவர்களுடைய அவதாரஸ்தலங்களில் ஒன்று தப்பாமல் எல்லாம் தென்கலை ஸ்தலங்களாகவே நாளைக்கும் விளங்கி வருகின்றன. அவைகளை வரிசையாக எடுத்துக் காட்டுகிறோம்.

1. பொய்கையாழ்வாருடைய அவதாரஸ்தலம் காஞ்சீபுரத்தில் ஸ்ரீயதோக்தகாரி ஸன்னிதி. இது தென்கலையே.
2. பூதத்தாழ்வாருடைய அவதாரஸ்தலம் மஹாபலிபுரமென்கிற திருக்கடல் மல்லைக்கோவில். அதுவும் தென்கலையே.
3. பேயாழ்வாருடைய அவதாரஸ்தலம் (சென்னைப் பட்டணத்தில்) மயிலைப் பெருமாள் ஸன்னிதி; இதுவும் தென்கலையே.
4. திருமழிசை யாழ்வாருடைய அவதாரஸ்தலம்—திருமழிசை. இதுவும் தென்கலையே.

5. நம்மாழ்வாருடைய அவதாரஸ்தலமான ஆழ்வார் திருநகரியும் தென்கலையே.
6. மதுரகவி யாழ்வாரின் அவதாரஸ்தலமான திருக்கோளூரும் தென்கலையே. (இது ஆழ்வார் திருநகரியின் ஸமீபத்திலுள்ளது.)
7. குல சேகராழ்வாருடைய அவதாரஸ்தலம் ஒரு கலையார்க்கும் அதீனமாக இல்லை! தென்கலையுமல்ல, வடகலையுமல்ல.
8. பெரியாழ்வாருடையவும் ஆண்டாளுடையவும் அவதாரஸ்தலமான ஸ்ரீவில்லி புத்தூரும் தென்கலையே.
9. தொண்டரடிப் பொடியாழ்வாருடைய அவதாரஸ்தலமான திருமண்டங்குடியும் தென்கலையே.
10. திருப்பாணாழ்வாருடைய அவதாரஸ்தலமான உறையூரும் தென்கலையே.
11. திருமங்கையாழ்வாருடைய அவதாரஸ்தலமான திருவாலி திருநகரியும் தென்கலையே.

ஆக ஆழ்வார்களின் அவதாரஸ்தலங்கள் யாவும் தென்கலை ஸ்தலங்களாகவே விளங்கி வருவதோடு இத்தலங்களில் வேறு கலையின் ஸம்பந்தம் விவாத விஷயமாகக் கூட இல்லையென்பது கவனிக்கத் தக்கது. இவ்விடங்களில் வடகலையாருடைய ப்ரவேசலேசமும் கிடையாது.

48. இனி ஆசாரியர்களின் அவதாரஸ்தலங்களையும் எடுத்துக் கொண்டு பார்க்கலாம். ஸ்ரீமந் நாதமுனிகள் தொடங்கி மணவாள மாமுனிகள் வரையிலுள்ள ஆசாரியர்களில் ஒரு ஆசார்யருடைய ஸன்னிதி தப்பாமல் எல்லாமும் தென்கலையாகவே விளங்கி வருகின்றன. இதில் ஒரு விசேஷமும் கவனிக்க வேண்டியதுண்டு, ஸ்ரீ ராமாநுஜருடைய திருவடிகளில் ஆச்ரயித்திருந்தவர்கள்—கூரத்தாழ்வான் எம்பார் முதலியாண்டான் முதலானவர்கள் ஒரு பிரிவினையாகவும், திருக்குருகைப்பிரான் பிள்ளான் கிடாம்பியாச்சான் முதலானவர்கள் மற்றொரு பிரிவினையாகவும் கொள்ளப்படுகிறார்கள். இதில் இரண்டாவது பிரிவினையை வடகலையார்கள் தங்களுடைய ஆசார்ய பரம்பரையாகச் சொல்லிக் கொள்ளுகிறார்கள். அப்படியே யிருக்கட்டும். அந்த திருக்குருகைப் பிரான் பிள்ளான் கிடாம்பியாச்சான்

முதலானவர்களுக்கு எங்குமே ஆலய ப்ரதிஷ்டை ஏற்பட்டிருக்க வில்லை. கூரத்தாழ்வான் எம்பார் முதலியாண்டான் என்னும் வகுப்பினர்க்கே அக்காலந் தொட்டு ஆலய ப்ரதிஷ்டை ஏற்பட்டு நாளைக்கும் விபவமாக நடந்து வருகிறது. கூரத்தாழ்வான் முதலான இப்பரம்பரை யாசாரியர்களுக்கு இப்படி ஆலய ப்ரதிஷ்டை ஏற்பட்டிருப்பது போல, பிள்ளான் முதலான அப்பரம்பரை யாசாரியர்களுக்கு ஆலய ப்ரதிஷ்டை ஏன் ஏற்படவில்லையென்று கேட்டால், நாங்கள் ஆலயபாஹ்யர்களாயிருந்தோ மென்பர்கள்.

49. தவிர, மற்றொரு முக்கியமான விஷயமும் இங்கே கவனிக்க வேண்டியதாயிருக்கிறது. வடகலையார்கள் தங்களுடைய ஆசார்ய பரம்பரையாகச் சொல்லிக் கொள்ளுகிற [பிள்ளான் முதலான ஆசார்ய] வரிசையில் '**எங்களாழ்வான்**' என்றொரு ஆசார்யரும் தேசிகருக்கு முன்னே சேர்ந்திருக்கிறார். இவர் உச்சிக் குடுமி ஸ்ரீவைஷ்ணவ மரபில் சேர்ந்தவரென்பது யாவரு மறிந்த விஷயம். இதில் ஒருவர்க்கும் விவாதமில்லை. இப்பூமண்டலத்தில் உச்சிக் குடுமி ஸ்ரீவைஷ்ணவர்கள் பலவாயிரக் கணக்கில் எங்கும் மலிந்திருக்கிறார்கள். இவர்களே சோழியர் எனப்படுபவர்கள். இவ்வகுப்பில் ஆதிகாலந் தொடங்கி இந்நாள் வரையில் வடகலைத் திருமண் இடுபவர் ஒருவர் கூட இல்லையென்பது திண்ணம். மேற்கே மைஸூர் ப்ராந்தத்தில் 'மண்டயத்தார்' என்னும் வகுப்பிலு மப்படியே. அந்த வகுப்பைப்பற்றி இப்போது விசாரமில்லை. புரச் சூடர்களின் வகுப்பில் ஆழ்வார்களும் ஆசாரியர்களும் பலபலர் அவதரித்திருக்கிறார்கள். அந்த வகுப்பில் அவதரித்தவரான (மேலே சொன்ன) எங்களாழ்வானென்னு மாசாரியர் தென்கலைத்திருமண் அணியப் பெற்றவரே யொழிய வடகலைத் திருமண் ஸம்பந்தமே யில்லாதவர் என்பது நிர்விவாதம். அவர்க்குத் திருவெள்ளறையில் ஆலயப்ரதிஷ்டை யுண்டு. அவருடை சிஷ்ய கோடியைச் சேர்ந்தவர்களாக [வடகலையார்களே ஒப்புக் கொள்ளுகிற] நடாதூரம்மாள் வேதாந்த தேசிகர் முதலானவர்களும் தென்கலைத் திருமண் தவிர வேறொன்றை யறியாதிருந்தவர்களேயென்பது ஸந்தேஹ மற்ற விஷயம். வேதாந்த தேசிகரைப்பற்றி மேலே விரிவாகத் தெரிவிக்கப் போகிறோம்; அவர் விபவத்திலும் அர்ச்சையிலும் தென்கலையே யென்பது மிகத் தெளிவாக அறியலாகும்.

50. ஆக, ஆழ்வார்களுடைய அவதாரஸ்தலங்கள் போலவே ஆசார்யர்களுடைய அவதாரஸ்தலங்களுமெல்லாம் தென்கலேயே யொழிய ஒன்றில் கூட வடகலைத் திருமணுக்கு ப்ரஸக்தியே கிடையாதென்பது தெரிவிக்கப்பட்டது. இது தவிர மற்றொரு விசேஷமும் கவனிக்க வேண்டும். அதுதான் மிகவும் முக்கியமானது; அதாவது—ஸ்ரீ ராமாநுஜர் பல ஆசார்ய புருஷர்களை ஸிம்ஹாஸநாதிபதிகளாக நியமித்து, ஸ்ரீரங்கம் முதலான தேவஸ்தானங்களில் பலவகைப்பட்ட ஸன்னிதி கைங்கரியங்களில் நிர்வாஹகர்களாக்கி நித்யமாகவும் நைமித்திகமாகவும் மரியாதைகளை யநுபவிக்கும்படி நிபந்தனை செய்திருக்கிறார். நேராக ஸ்ரீராமாநுஜர் நிபந்தனைகள் செய்தது ஸ்ரீரங்கத்தில். அங்கு அவரால் நியமிக்கப்பட்டுக் கைங்கரியங்களை நடத்திவருகிறவர்களும் ஆச்சரியமான மரியாதைகளை நாளைக்கும் அநுபவித்துவருபவர்களுமான ஆசார்ய புருஷர்கள் யாவரும் தென்கலையார்களே யொழிய வடகலை வகுப்பில் ஒருவர் கூட இல்லை என்பதை நன்றாக கவனிக்கவேண்டும். ஸகல திவ்ய தேசங்களிலும் ஆசார்ய புருஷஸ்தானத்தை யலங்கரித்து மரியாதைகளை வெகு சிறப்பாக அநுபவித்து வருபவர்கள் தென்கலையார்களே யென்பது ப்ரத்யக்ஷம். பெரிய நம்பிவம்சஸ்தர், திருக்கோட்டியூர் நம்பி வம்சஸ்தர், திருமாலையாண்டான் வம்சஸ்தர், எம்பார் வம்சஸ்தர், கூரத்தாழ்வான் வம்சஸ்தர், அமுதனார் வம்சஸ்தர், திருமலை நல்லான் வம்சஸ்தர், முதலியாண்டான் வம்சஸ்தர், கந்தாடை வம்சஸ்தர், அருளாளப் பெருமாளெம்பெருமானார் வம்சஸ்தர், அனந்தாழ்வான் வம்சஸ்தர், கோயிலண்ணன் வம்சஸ்தர், ப்ரதிவாதிபயங்கர வம்சஸ்தர், கிடாம்பி வம்சஸ்தர், ஆயனார் வம்சஸ்தர், மணவாள மாமுனிகள் ஸந்ததியார், அஷ்டகோத்ர வகுப்பினர், எறும்பியப்பா வம்சஸ்தர், தொட்டயாசார் வம்சஸ்தர் என்றிப்படி குலாவப்படுகின்ற ஆசார்ய புருஷர்கள் யாவரும் ஆங்காங்கு திவ்ய தேசங்களில் ஸ்ரீராமாநுஜர் காலத்திலிருந்தும் மணவாள மாமுனிகள் காலத்திலிருந்தும் பலவகைப்பட்ட பஹுமானங்களை யநுபவித்து வருவது அபலபிக்கவொண்ணாதது. இத்தகைய ஆசார்ய புருஷர்களில் வடகலை வகுப்பினர் தென்படுகிறார்களாவென்று பார்க்கவேணும். சில திவ்ய தேசங்களில் சிலகாலமாக இதில் சிறிது மாறுபாடு ஏற்பட்டிருந்தாலும் ஸ்ரீரங்கம் தேவஸ்தானத்தில் அன்றுதொட்டு இன்று

வரையில் இதில் ஒருவிதமான மாறுபாடுமில்லை. அங்கு ஸ்ரீராமா நுஜர் தம்முடைய ஆசார்ய வம்சஸ்தர்களுக்கும் சிஷ்யவம்சஸ்தர்களுக்கும் கைங்கர்யங்களையும் மரியாதைகளையும் பஹுமானங்களையும் ஏற்பாடு செய்தார். அவர்கள் யாவரும் தென்கலை வகுப்பினரேயென்பதை கவனித்தால் அக்காலத்தில் வடகலை வகுப்பினர் கோவில்களில் எட்டிப்பார்த்தவர்களுமல்லர் என்பது விளங்கும். *யதார்த்தவாதீ பஹுஜநத்வேஷீ* என்பதை அடிக்கடி நினைக்கிறோம்.

51. இன்னமும் கேளுங்கள்; ஆங்காங்கு ஸன்னிதிகளில் கைங்கரியங்களைக் குறையற நிர்வஹிப்பதற்காக ஜீயர்களையும் மடாதிபதிகளாக ஏற்பாடு செய்தார் ஸ்ரீராமாநுஜர். அந்த ஜீயர்களும் தென்கலையார்களேயொழிய வடகலை வகுப்பினரல்லர். நாளைக்கும் எந்தெந்த தேவஸ்தானங்களில் எந்தெந்த மடாதிபதிகள் கைங்கரியங்களைச் செய்து மரியாதைகளை யனுபவித்து வருகிறார்களென்பதை ப்ரத்யக்ஷமாகப் பார்க்கலாம். அவர்கள் யாவரும் தென்கலையார்களே யென்பதில் ஸந்தேஹமுண்டோ? ஸ்ரீரங்கத்தில் ஸ்ரீரங்கநாராயண ஜீயர்; திருமலை திருப்பதியில் பெரிய ஜீயர் சிறிய ஜீயர். காஞ்சீபுரத்தில் அழகிய மணவாள ஜீயர். திருநாராயணபுரத்தில் யதிராஜ ஜீயர்; வானமாமலை, திருக்குறுங்குடி, திருமாலிருஞ்சோலை, ஆழ்வார் திருநகரி, ஸ்ரீவில்லிபுத்தூர், திருக்கோவலூர், ஸ்ரீபெரும்பூதூர் முதலான எந்த ஸ்தலத்திலும் மடாதிபதி ஜீயர்கள் நாளைக்கும் விளங்குகிறார்கள். இவர்களில் ஒருவராவது வடகலை வகுப்பினருண்டா வென்பதைப் பார்க்கவேணும். ஆனால் ஒரேயொரு மடாதிபதி வடகலையாக இருக்கிறாரென்று சொல்லவருவர்கள். அவர் எத்தனை வருஷமாக வடகலையா யிருக்கிறார்? என்று கேட்டால் தலைகுனிந்து நிற்பர்கள். அவரைப்பற்றின சரித்திரங்கள் இப்புத்தகத்தில் தனிப்பட அநுபந்தமாகச் சேரும். ஆக, ஸ்ரீராமாநுஜருடைய நியமனத்தினால் ஆங்காங்கு விளங்கும் மடாதிபதிகளும் தென்கலை வகுப்பினர்களே என்றதாயிற்று.

52. மற்றொன்றும் கேளுங்கள்; ஸ்ரீரங்கம், திருநாராயணபுரம், ஸ்ரீவில்லிபுத்தூர், ஆழ்வார் திருநகரி, திருக்குறுங்குடி முதலான விடங்களில் ஸ்ரீமந்நாத முனிகள் காலந்தொடங்கியும் ஸ்ரீராமாநுஜர் காலந்தொடங்கியும் 'அரையர்கள்' நியமிக்கப்

பட்டு இவர்கள் திவ்யப்ரபந்தங்களைத் தாளத்துடன் ஸேவித்து ஆச்சரியமான சிறப்புகளை யடைந்து வருகிறார்கள். இவ்வரையர்களும் தென்கலை வகுப்பினரே யொழிய ஓரிடத்திலும் ஒருவர்கூட வடகலையில் இல்லை. அக்காலத்தில் இவர்கள் எங்கிருந்தார்களோ? விசாரிக்கவேணும்.

53. ஆக, ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞையின் ஒழுங்கை இவ்வளவாக ப்ராமாணிகமாய் நிரூபித்தோம். எங்கும் திவ்ய தேசங்களைத் தென்கலை மயமாக ஸ்தாபித்து வைத்ததே ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞை யென்று கல்வெட்டாகத் தேறி நின்றது. வேறுவிதமான ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞை யிருப்பதாக வாய்திறக்க முடியாது. ஸ்ரீ ராமாநுஜர் செய்த வேறுவிதமான திவ்யாஜ்ஞைகளும் இருக்கலாமானாலும், அவைகளை திவ்யப்ரபந்த சாத்துமுறைகளில் ஸ்மரிக்க வேண்டிய அவச்ய மில்லையன்றோ. சாத்துமுறை காலங்களிலேயே நியமேந அநுஸந்திக்கப்படுகிற இந்த திவ்யாஜ்ஞையானது திவ்யதேச பரிபாலன விஷயமாகத்தா னிருக்கத்தக்கது. அந்த திவ்யாஜ்ஞையில் ஸம்பந்த லேசமுமில்லாதவர்களான வடகலை வகுப்பினர் ***ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞா வர்த்ததாம் அபிவர்த்ததாம்*** என்று கோஷிப்பதானது எவ்வளவு பொருத்தமான தென்பதை விவேகிகள் விமர்சிக்க வேணும். *** ஸ்ரீமந் ஸ்ரீரங்கச்ரியமநுபத்ரவாம் அநுதிநம் ஸம்வர்த்தய** * என்று கோஷிப்பதும் விஷய மறியாமையாலன்றோ. ஸ்ரீரங்க ஸ்ரீயாவது என்ன? என்பதை வடகலையார்கள் விமர்சித்தார்களாகில் இதைச் சொல்ல வாய் எழும்புமா? ஸ்ரீரங்கநாராயண ஜீயரும் பராசர பட்டரும் வேதவ்யாஸ பட்டரும் அண்ணங்காரும் வாதூலரங்காசாரும் பெரிய நம்பிகளும் எம்பாரும் கோமடத்தாரும ப்ரதிவாதி பயங்கரரும் இளையவில்லிகளும் கந்தாடை பாவநாசாரும் கிடாம்பியாரும் ஆயனாரும் பிள்ளையுறங்காவில்லி தாஸஸ்தாநீய கந்தாடை ராமாநுசனுமாகத் தென்கலைப் பெரியார்களே முன்னின்று ஸகல சிறப்புகளையு மநுபவித்து நிர்வஹிக்கிற ஸ்ரீயல்லவோ ஸ்ரீரங்கஸ்ரீ யென்பது. இந்த ஸ்ரீயானது நாடோறும் நிருபத்ரவமாகச் செழித்து ஓங்கவேணு மென்று மங்களாசாஸனம் செய்ய எந்த வகுப்பினர் கடமைப்பட்டவர்க ளென்பதை நாமெடுத்துச் சொல்ல வேணுமோ? * इन्द्रादीनां सुराणां स्यात् नित्यश्रीर्नित्यमङ्गलम्— இந்த்ராதிநாம்

ஸஹராணும் ஸ்யாத் நித்யஶ்ரீர் நித்யமங்களம்* என்று அரக் கருமசுராரும் கோஷிப்பது போலன்றோ இது உள்ளது. இப்படி யாக நாமெடுத்துக் காட்டும் ஒவ்வொரு விஷயமும் வடகலை வகுப் பினர் புதுத்தெய்வம் கொண்டாட வந்தவர்களே யென்பதை நன்கு நிலை நாட்டி நிற்கும். ராமாநுஜ தயாபாத்ரத் தனியனை இவர்கள் புதிதாக ஸ்ருஷ்டித்துக் கொண்டது போல *லக்ஷ்மீநாத ஸமா ரம்பாம்* இத்யாதியான மற்ற நான்கு ச்லோகங்களையும், *ஸர்வ தேச தசாகாலேஷு* இத்யாதிகளான சாத்துமுறை ச்லோகங் களையும் இவர்கள் வேருக ஸ்ருஷ்டித்தே யிருக்கவேண்டும்; இவ்வேழு ச்லோகங்களும் இவர்களுக்கு ஒரு விதத்திலும் பொருந் தியவை யல்ல என்பதை நம்முடைய நிருபணங்களினுல் உலகம் நன்கறிந்துவிட்டது. இனியாகிலும் இவர்கள் தெளிவர்களா?

54. ராமாநுஜ தயாபாத்ரத் தனியன் தேசிகர் காலத்திலேயே பிறந்ததாக வைத்து அதற்கு வருஷம் மாஸம் பக்ஷம் திதி வாரம் நக்ஷத்ரம் லக்னம் ஹோரை ஆகிய எல்லாவற்றையு மிட்டு ஒரு பெரிய ச்லோகம் செய்து அச்சிட்டிருக்கிருர்கள். அதில் வியா கரணப்பிழை விசேஷமாக வுள்ளதென்பதை நாம் நிருபித்துக் காட்டின பின்பு பண்டிதர்கள் இது நவீந கல்பிதமான ச்லோகந்தா னென்று தெளிந் தொழிந்தார்கள். நம்மாழ்வார் நாதமுனிகள் ஆளவந்தார் ஸ்ரீராமாநுஜர் முதலான ஆசாரியர்களின் தனியன் கள் உலகமெங்கும் எவ்வளவோ சிறப்புற்று விளங்குகின்றன. அவை எந்த நாளில் அவதரித்தவை யென்பதைப் பற்றி ஒரு ச்லோகமோ ஒரு வாக்யமோ எதுவும் காண்பதில்லை. தோன்றின நாள் முதற்கொண்டு பங்கப்பட்டே வருகிற ராமாநுஜ தயாபாத்ரத் தனியனுக்கு வர்ஷமாஸ திதிவார நக்ஷத்ர லக்நாதிகளைக் காட்டுகிற ச்லோகமொன்று புராதனமாகத் தோன்றி யிருக்கிறதென்ருல் இதைக்கொண்டே விவேகிகள் உண்மையை யுணரலாமன்ருே. தேசிகர் அவதரித்த வருஷம் எது வென்பது இன்னமும் நிச்ச யிக்கப்படாமல் ஊசலாடிக் கொண்டிருக்கிறது. விபவ வருஷத்தில் அவதரித்ததாகச் சிலரும், சுக்ல வருஷத்தில் அவதரித்ததாகச் சிலரும் எழுதி ஓயாத சண்டையிலிருக்கிறது. ஒன்ருன ஆசார்ய ருடைய காலநிர்ணயம் இவ்வழகிலிருக்க, ஒரு கல்பித ச்லோகத் திற்குக் கால நிர்ணயம் செய்கிற ச்லோகமொன்று அப்போதே

ஜனித்திருப்பதாகக கூறுவதிலிருந்தே விவேகிகள் மருமத்தை எளிதாக அறிந்து கொள்ளலாமே.

55. இன்னமும் ஒரு வேடிக்கை கேளுங்கள். இந்த ராமாநுஜ தயாபாத்ரத் தனியன் நவீனமன்று, புராதனமே யென்று வடகலை வருப்பினர் வாதிக்கும்போது ஒரு காரணம் வெளியிட்டார்கள்; அதாவது, இந்தத் தனியனுக்கு வாத்ஸ்ய அஹோபிலா சாரியர் என்பவர் வியாக்கியானம் செய்திருப்பதாகவும், அவர் ஐந் நூறு வருஷங்களுக்கு முற்பட்டவ ரென்றும் ஆகவே இத்தனி யன் நவீனமாயிருக்க முடியாதென்றும் எழுதினார்கள். இதி லிருந்து ஒரு பாணம் வெடித்தது. அந்த வாத்ஸ்ய அஹோபிலா சாரியர் செய்த வியாக்கியானம் அச்சிடப்பட் டிருக்கிறது. அதில் அவருடைய அழுகை ஸ்பஷ்டமாகக் காண்கிறது. அதாவது, இந்த ராமாநுஜ தயாபாத்ரத் தனியன்தான் கோவில்களி லெல் லாம் சொல்லவேண்டும்; ஆனால் இதைச் சொல்லாமல் வேறு தனியனே [ஸ்ரீசைலேச தயாபாத்ரத் தனியனே] எங்கும் வெற்றி பெற்றிருப்பதானது கலியின் கோலாஹலம்; பொறாமைக்காரர் களின் துஷ்ட சேஷ்டை என்று நிந்தித்திருக்கிறார். இதனால் இந்தத் தனியனுடைய பங்கமே அவராலும் வெளியிடப் பட்டதா யிற்று. உண்மையில் அந்த அஹோபிலாசாரியர் 50 வருஷங் களுக்கு முன்பிருந்தவரே யொழிய 500 வருஷங்களுக்கு முன் பிருந்தவருமல்ல. சென்னையில் ஒரு ஆங்கில கலாசாலையில் ஸம்ஸ்க்ருதோ பாத்யாயராக இருந்தவர் அவர் என்பதை சென்னை வாஸிகளனைவரு மறிவர். இந்த ராமாநுஜ தயாபாத்ரத் தனிய னைப் புராதனமென்று காட்டிக் கொள்வதற்கு இவர்கள் படுகிற பாடு வாசாமகோசரம். எப்பாடு பட்டாலும் அது நவீன மென் பதே கல்வெட்டாகி நிற்கிறது.

56. இந்த ராமாநுஜ தயாபாத்ரத் தனியன் தேசிகருடைய அவதாரஸ்தலத்தில் எவ்விதமான நிலைமையி லிருக்கிறதென்பதை முக்கியமாக உலகர்கள் கவனிக்கவேணும். அதைப்பற்றி இனி உள்ளபடி நிரூபிக்கிறோம். வடகலை வகுப்பினருக்கும் தேசிகருக் கும் முற்காலத்திலிருந்து யாதொரு ஸம்பந்தமும் கிடையா தென் றும், மிகவும் நவீனமான காலத்திலேயே இவர்கள் தேசிகரோடு

உறவு கொண்டாட ஆரம்பித்தார்களென்றும் இந்த உண்மையையும் நிரூபிக்க வேண்டுவது இந்நூலுக்கு முக்கியமானது. அதையும் நன்றாக நிரூபித்து இந்நூலை முடிப்போமாக.

57. தேசிகருடைய அவதாரம் காஞ்சீபுரியில் தீபப்ரகாசரென்னும் விளக்கொளி யெம்பெருமான் ஸன்னிதி வாசலில் என்பது ப்ரஸித்தம். அங்கு தேசிகருடைய ஆலயம் உள்ளது. அதில் ஆதிகாலத்திலிருந்து தென்கலைத் திருமண்தா னிருந்தது. கி. பி. 1874 ஹூத்தில் வடகலை வகுப்பினர் அத்திருமணை இடித்துத் தள்ளி வடகலைத் திருமண் போட்டார்களென்பது நியாயஸ்தான ரிகார்டுகளால் ஸ்பஷ்டமாகத் தெரியவருகிறது. அதாவது இற்றைக்கு 79 வருஷங்களுக்கு முன் வரையில் தேசிகருடைய அவதார ஸ்தலத்தில் தென்கலைத் திருமண்தான் இருந்த தென்பது நிஸ்ஸந்தேஹமான விஷயம். ஸ்ரீரங்கத்தில் ஸ்ரீரங்கநாச்சியார் ஸன்னிதி யெதிரில் விளங்குகின்ற தேசிகர்ஸன்னிதி வாசலில் புராதனக் கட்டிடமான தென்கலைத் திருமண் நாளைக்கும் எப்படி பிரகாசிக்கின்றதோ இப்படியேதான் காஞ்சீபுரத்திலும் அவருடைய அவதாரஸ்தலத்தில் தென்கலைத் திருமணே பிரகாசித்துக் கொண்டிருந்தது கி. பி. 1874 ஆம் ஹூ வரையில்.

58. காஞ்சீபுரத்தில்மஹாவ்யாபகராகவும் ஸ்ரீதேவராஜஸ்வாமி தேவஸ்தான தர்மகர்த்தாவாகவும் எழுந்தருளியிருந்த திருப்புட்குழியப்பா ஸ்வாமியென்று ஸுப்ரஸித்தரான உ. வே. ஸ்ரீ கிருஷ்ணதாதாசாரியர் ஸ்வாமி 1874-ஆம் வருஷத்தில் செங்கற்பட்டு ஜாயிண்டு மேஜிஸ்ட்ரேட் கோர்ட்டில் ஒரு கிரிமினல் தாவாவில் பிரதிவாதியாக எழுந்தருளும்படி நேரிட்டது. தூப்புல் தேசிகன் ஸன்னிதி முன்னணியில் இருந்த புராதன காரைக்கட்டிடமான தென்கலைத் திருமண் காப்பை ஷை திருப்புட்குழி யப்பா ஸ்வாமியின் தூண்டுதலால் சில வடகலையார்கள் இடித்துவிட்டார்களென்று ஸப் கலெக்டர் மிஸ்டர் குருல்துரை முன்னிலையில் தொடுக்கப் பட்டிருந்த தாவாவில் ஷை திருப்புட்குழி ஸ்வாமியும் ஒரு எதிரியாக இருந்தார். அந்த தாவாவின் நம்பர் 72. அதில் ஷை திருப்புட்குழி ஸ்வாமி கொடுத்த வாக்குமூலம் அப்படியே

அச்சாகி வெளிவந் திருக்கிறது. 19—8—1874-ல் ஷெடி ஸ்வாமி கொடுத்த அந்த ஸ்டேட்மெண்டில் விளங்குகின்ற வாசகங்கள்—

"விளக்கொளி தேசிகன் ஸன்னதி வாசலில் தென்கலை திருமண்தான் இருந்தது......................6, 7 மாதத்திற்கு முன் நான் வெளியூர் போயிருந்த போது யாரோ வடகலையார் அதையிடித்து விட்டதாக கேள்விப்பட்டேன் ....... அந்த தேசிகன் ஸன்னிதியிலுங்கூடத் தென்கலையார்களே தென்கலைமந்திரம் சொல்லியே திவ்யப்ரபந்த ஸேவை செய்து வருகிறார்கள். அங்கு வடகலையார் வடகலை மந்திரம் சொல்லிவரக் காணோம்."......:—என்பன.

இதனால் வேதாந்த தேசிகனுடைய அவதார ஸ்தலமும் புராதனமாகத் தென்கலையாயிருந்த தென்பது நிஸ்ஸந்தேஹமாக விளங்கும். வடகலைத் திருமண் ப்ரவேசத்திற்கு ப்ரஸக்தியே யில்லாத திருவல்லிக்கேணி, திருவிந்தளூர், ஸ்ரீ பெரும்பூதூர் முதலான விடங்களில் நாளைக்கும் தேசிகர் தென்கலைத் திருமண்காப்புடனே திகழ்கின்றமை ப்ரஸித்த மாதலாலும், அதை ஸஹியாமலே இக் காலத்தவர்கள் நூதனமாக ஆங்காங்கு மூலை முடுக்குகளில் வேறு தேசிகன் ஸன்னிதிகளைக் கட்டுவித்து ஸ்வேச்சையாக ஏதோ செய்துகொண்டு வருகிறார்களென்பது கவனிக்கத்தக்கது.

59. வேதாந்த தேசிகருக்கும் வடகலை வகுப்பினருக்கும் ஆதிகாலத்திலிருந்து யாதொரு ஸம்பந்தமும் இல்லாமலிருக்க இடையில்தான் அவரோடு உறவை ஏற்றிட்டுக்கொண்டார்களென்பதை இரண்டு வழிகளாலே நிரூபிக்கிறேன். (1) திவ்ய தேசங்களில் தேசிகனை வழிபாடு செய்யும் முறையில் வடகலையார்கள் வெகுகாலமாகவே விலகியிருக்கிறார்க ளென்பது ஒன்று. (2) தேசிகனுடைய க்ரந்தங்களில் ஸாதிக்கப்பட்டிருக்கிற விஷயங்களுக்குப் பெரும்பாலும் மாறுபாடாகவே இவர்கள் தங்கள் கொள்கைகளைப் பரப்பிவருகிறார்க ளென்பது மற்றொன்று. இவ்விரண்டு விஷயங்களையும் மத்யஸ்தர்களான ப்ராமாணிகர்கள் மதிக்கும்படியே தெரிவிக்கிறேன், கேண்மின். வேதாந்த தேசிகர் அவதரித்தது காஞ்சீபுரியில்; அவர் அதிகமாக வாழ்ந்தது ஸ்ரீரங்கத்தில். இவ்விரண்டு தலங்களிலும் தேசிகர் எவ்விதமான நிலையிலிருக்கிறாரென்று பாருங்கள். அவதாரஸ்தலத்திலிருக்கும் நிலையைக் கீழே திருப்புட்குழியப்பாஸ்வாமியின் ரிகார்டு மூலமாக நிரூபித்துக்காட்டினேன்.

ஸ்ரீரங்கத்து நிலைமைக்கு ஒரு ரிகார்டும் வேண்டா. நாளைக்கும் ப்ரத்யக்ஷமாகக் காணலாம். அங்கு ஸ்ரீரங்கநாச்சியார் ஸந்நிதிக்கு எதிரேயுள்ளது தேசிகன் ஸந்நிதி. அதில் வாசற் கொடுங்கையில் புராதன காரைக்கட்டிடமான தென்கலைத் திருமண் நாளைக்கு முள்ளது. ஸேவிக்கலாம். உள்ளே தேசிகனுடைய திருநெற்றியிலும் தென்கலைத் திருமண்காப்புத்தா னிருந்தது. அதை வடகலையாக மாற்றினபோது பிரபலமான கலஹங்கள் நடந்தன. அதன் பலனாக அவர் அத்யயநோத்ஸவாதி ஸந்தர்ப்பங்களில் மற்ற ஆழ்வாராசார்யர்களோடொப்ப புறப்பாடு கண்டருளமுடியாமல் மூலமூர்த்தியோடொத்து ஸ்தாவரப்ரதிஷ்டையாயிருந்து வருகிறார்.

60. அங்கு கோவிலுக்கு வெளிப்பட்ட வீதிகளில் தேசிக ஸந்நிதிகளைக் கட்டிவைத்துக் கொண்டாடி வருகிறார்கள். காஞ்சீபுரத்திலும் இப்படியேதான். ஒன்றான அவதாரஸ்தலதேசிகன் தென்கலையாரிட்ட வழக்காக இருந்து வருகிறாரென்று அந்த திவ்ய மங்கள விக்ரஹத்திலே வெறுப்புக்கொண்டு வெளிவாசலில் வேறாக வொரு தேசிகன் ஸந்நிதியைக் கட்டிவைத்துக் குலாவுகிறார்கள். தேவப்பெருமாள் ஸந்நிதியில் எழுந்தருளியிருக்கிற தேசிகனும் தென்கலையாரிட்ட வழக்காயிருக்கிறாரென்று வேகவதியாற்றின் கரையிலே ஒரு குறுக்கு வீதியில் தேசிகன் ஸந்நிதியென்று ஒன்றைக்கட்டிவைத்துக் குலாவிவருகிறார்கள். இப்படி ஒன்றிரண்டு இடங்களில் அல்ல; திருவல்லிக்கேணி, ஸ்ரீபெரும்பூதூர், திருவிந்தளூர் முதலான திவ்யஸ்தலங்களில் தேவஸ்தானத்திற்குள்ளே தேசிகன் எழுந்தருளியிருந்து உத்ஸவாதிகளை விசேஷமாக அநுபவித்துக் கொண்டிருக்கவும் அந்த தேசிகன் தென்கலையாரிட்ட வழக்காயிருக்கிறாரென்று அவரைவிட்டு வெளி வீதிகளில் புதிது புதிதாக தேசிகன் ஸந்நிதியென்று கட்டிவைத்துக் குலாவிவருகிறார்கள். இப்படி இவர்கள் புதிதாகக்கோவில்கட்ட ஆரம்பித்தது 50, 60 வருஷங்களுக்கு உட்பட்டதேயன்றி அதற்குமுன்பில்லை. திருச்சேறை, திருக்கோட்டியூர் முதலான ஸ்தலங்களிலும் ஸமீப காலத்திலேயே இவர்கள் பாஹ்ய பூமிகளிலே தேசிகன் ஸந்நிதியைக் கட்டிவைத்து, தாங்களுகந்த திருமண்காப்பை அவர்க்குச் சாத்தியும், தாங்கள் கல்பித்த நூதந பாத்ரத் தனியன் வாழிதிரு

நாமங்களை அவர் முன்னிலையில் கோஷிக்தும் வருகிறார்கள். இதை யெல்லாம் பார்ப்பவர்களுக்கு, இவ்வடகலை வகுப்பினர் தேசிகனோடு உறவு கொண்டது வெகுஸமீப காலத்தில் வந்தேறியானது என்பது எளிதாகப் புலப்படும். "ஆங்காங்கு ப்ரஸித்த திவ்ய தேசங்களிலே தேசிகன் எழுந்தருளியிருந்து உத்ஸவாதி வைப வங்களையும் வெகு அழகாக அநுபவித்துக்கொண்டிருக்க, நீங்கள் எதுக்கு அவ்விடங்களில் ஆலய பாஹ்யபூமிகளிலே அவர்க்கு ஒரு சிறு கோவில்கட்டிக் குலாவிவருகிறீர்கள் ?" என்று இவர்களையே கேட்கலாமே.

61. "தேசிகனுக்கு அநியாயமாய்த் தென்கலைத் திருமண் காப்பு சாத்திவிட்டார்கள் ; அதனால்தான் நாங்கள் தனியே வெளி நிலங்களில் தேசிகனுக்குக் கோவில்கட்ட நேர்ந்தது" என்று இவர் கள் சொல்லிவருவதுண்டு. தேசிகன் விபவகாலத்தில் எவ்விதமான திருமண்காப்பைத் தாம் சாத்திக்கொண்டிருந்தார் என்பதை விமர் சித்து முடிவு செய்வதில் சிறிதும் அருமையில்லை. ஸகல ஆழ்வா ராசாரியர்களின் அவதாரஸ்தலங்களுட்பட ஸகல திவ்யதேசங் களும் அநாதிகாலமாகத் தென்கலைத் திருமண்காப்பே விளங்க நிற்கும்போது தேசிகன்மாத்திரம் வேறுவிதமான திருமண்காப்பு அணிந்துகொண்டிருந்தா ரென்பதை பிராமாணிகர்களின் நெஞ்சு இசையாது. இது எப்படியாவது இருக்கட்டும். திருமண்காப் பைப்பற்றி தேசிகன் க்ரந்தமெழுதாம லிருக்கவில்லை. ஸச்சரித்ர ரக்ஷை யென்கிற க்ரந்தம் தேசிகன் ஸாதித்தது உலகமெல்லாம் பரவியுள்ளது. அதிலிருந்து ப்ராமாணிகமாக விஷயங்கள் பேச கிறோமினி.

மூன்றுமதிகாரம் முற்றிற்று.

## —நான்காமதிகாரம்—திருமண்காப்பு விஷயம்—

62. ஊர்த்வபுண்ட்ர ஆகாரத்தில் பேதம் ஏற்பட்டிருப்ப தால் இந்த பேதம் எக்காலத்தில் ஏற்பட்டது? யார் ஏற்படுத்தினது? எந்த ஆகாரம் சாஸ்த்ரீயமானது? இத்யாதி விசாரங்களைப் பலர் பண்ணுவதுண்டு. பேதம் ஏற்பட்டிருப்பது வாஸ்தவம். எக்காலத் தில் இது ஏற்பட்டது என்பது நிர்ணயிக்க முடியாதது. இரண்டும்

அநாதியாகவே உண்டு என்று கொள்வதில் பாதகமொன்றுமில்லை. இந்த புண்ட்ர பேதத்தைப் பூர்வாசார்யர்களுக்குள்ளே சிலர் ஏற்படுத்தினதாகச் சொல்லுவது ஆதாரமற்றது. ஆசாரியர்களெல்லாரும் வேற்றுமையின்றிக்கே ஒரே விதமான ஊர்த்வபுண்ட்ரத்தையே அணிந்து வந்தவர்களென்பதில் ஸந்தேஹிக்க இடமில்லை. சீறு நாமமென்று வழங்கப்பட்டுவந்த வடகலைத் திருமண் நம் ஆசார்ய கோஷ்டியில் புகுந்திருந்ததில்லை யென்பது திண்ணம்.

63. வேதாந்ததேசிகர் தாமியற்றிய 'ஸச்சரித்ரரக்ஷையில்' ஊர்த்வபுண்ட்ர விஷயமாக வெகுதூரம் சர்ச்சை செய்திருக்கிறார். அவருடைய காலத்தில் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்குள்ளே திருமண் காப்பில் வேற்றுமை ஏற்பட்டிருந்திருக்குமாயின் அதைப்பற்றின கண்டன மண்டனங்களை அவர் செய்தருளாமலிருந்திருக்கமாட்டார். பஸ்மதாரணம் முதலியவற்றில் விரிவான கண்டனங்கள் செய்தருளியிருக்கிறாரே யல்லது, திருமண்காப்பு ஸந்நிவேசத்தில் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்குள் அவாந்தர பேதமிருப்பதாக ப்ரஸ்தாவமும் செய்யவில்லை. ஆகவே அவருடைய காலத்தில் ஸ்ரீ வைஷ்ணவர்களெல்லாரும் ஏகரூபமான திருமண் காப்பையே அணிந்து வந்தார்களென்பது அறியக் கிடக்கின்றது.

64. தீபசிகாகாரம், வேணுபத்ராகாரம், பத்ம முகுளாகாரம், குமுதாகாரம், மத்ஸ்யாகாரம், கூர்மாகாரம், சங்காகாரம், சூர்ப்பாகாரம், துத்தூர புஷ்ப (ஊமத்தம் பூ) ஆகாரம், தண்டாகாரம், திந்த்ரிணீ பத்ராகாரம்—என்றிப்படி அநேக ஊர்த்வபுண்ட்ராகாரங்கள் ஆங்காங்கு சாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டிருப்பதாக உதாஹரித்துக் காட்டி இவை யெல்லாவற்றினுள்ளும் ஹரிபாதாகாரமே உத்தமமென்றும், ஏகாந்திகளல்லாத வைஷ்ணவர்களுக்கு மற்ற ஆகாரங்கள் உபாதேயங்களாகலாமென்றும் அந்த ஸச்சரித்ரரக்ஷையிலேயே முடிவுகட்டி யிருக்கின்றார். ஸ்ரீமத் வேதாந்த தேசிக க்ரந்தமாலா பதிப்பிலுள்ள ஸச்சரித்ர ரக்ஷையில் பக்கம் 73-ல் இவ்விஷயம் விசதமாகக் காணலாம்.

65. உத்தம ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு உரியவை யல்ல வென்று ஸ்ரீ தேசிகனால் கருதப்பட்ட ஆகாரங்களை அச்சிட்டுக் காட்டினால் விஷயம் நன்கு விளங்குமென்று தோன்றி அவை அடைவே அச்சிட்டுக் காட்டப்படுகின்றன :—



கூர்மாகாரமான
ஊர்த்வ புண்ட்ரம்



ஆமை வடிவமான
திருமண்காப்பு.



துத்தூர -புஷ்பாகாரமான
ஊர்த்வ புண்ட்ரம்.



ஊமத்தம்பூ வடிவமான
திருமண்காப்பு.



பத்மமுகுளாகாரம்.



தாமரை மொக்கு வடிவமான திருமண்காப்பு.



மத்ஸ்யாகாரம்.



மீன்வடிவமான திருமண்காப்பு.




வேணு பத்ராகாரம்.




தீப சிகாகாரம்.



சூலாகாரம்



வேல்வடிவமான திருமண்காப்பு.



சூர்ப்பாகாரமான ஊர்த்தவ புண்ட்ரம்



குமுத புஷ்பாகாரம். ஆம்பல்மலர் வடிவமான திருமண்காப்பு. திந்தரிணீபத்ராகாரம் (புளியிலையுருவம்)

66. ஆக இவ்வளவும் காட்டப்பட்டுள்ள ஆக்ருதிகள் ஸச்சரித்திரரக்ஷை முதலானவற்றில் உதாஹரிக்கப்பட்டவையே. இவ் வாகாரங்களான ஊர்த்வ புண்ட்ரங்களைத் தரிக்கவேண்டிய தென்று சாஸ்த்ரங்களில் ஏற்படுவதாகப் பாரமேஷ்ட்ய ஸம்ஹிதை முதலான பல நூல்களிலிருந்து வசனங்கள்பலவற்றை தேசிகனெடுத்துக்காட்டி முடிவில் தம்முடைய ஸித்தாந்தமாக என்ன முடித்தாரென்றால், ஏகாந்திகளான ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ஹரிபாதாகாரமான ஊர்த்வ புண்ட்ரமே உபாதேயமென்றும் மற்றவையெல்லாம் ஏகாந்திகளல்லாத வைஷ்ணவர்களுக்கு உபாதேயமாகலாமென்றும் முடித்தருளினார். "एकान्तित्वरहित वैष्णवमात्रविषयतयाऽपि वचनस्य चरितार्थत्वात्" என்பது அவ்விடத்திலுள்ள தேசிக திவ்ய ஸூக்தி.

67. இனிமேல் தென்கலைத் திருமண்காப்பு ஸன்னிவேசங்களும் அவற்றுக்கான ப்ரமாண விவேசனங்களும் நிரூபிக்கப்படுகின்றன. அடுத்த 50-வது பக்கத்தில் நெ. 1, நெ. 2, நெ. 3 என்று மூன்று லக்கங்கள் கொடுத்துக் காட்டப்பட்டுள்ள திருமண்காப்பு ஸன்னிவேசங்களைப்பற்றித் தெரிந்துகொள்ளவேண்டிய விஷயமாவது :—பாஞ்சராத்ர சாஸ்த்ரங்களில் *நாஸிகாமூலமாரப்ய* என்றும், *ஹரே: பாதத்வயாக்ருதிம்* என்றும் ப்ரமாணங்களிருப்பது ப்ரஸித்தம். மூக்கின் மூன்றிலொரு பாகத்திற்கு நாஸிகா மூலமென்று பெயர் என்பதாக ஸம்ஹிதையிலேயே விவரணம் செய்யப்பட்டிருக்கிறது. நாஸிகா மூலத்திலிருந்து ஹரிபாதத்வயாகாரமாக நெற்றியில் திருமண்காப்பு அணிந்து கொண்டால் எவ்விதமாக இருக்குமோ அவ்விதமானது ஷெ நெ. 1 உருவத்தில் காட்டப்பட்டிருக்கிறது. அவ்விதமாகத் திருமண்காப்பு இடுகிற பக்ஷத்தில் இரண்டு கண்களையும் சிறிது மறைத்துக் கிடக்கிறபடியாலே அப்படி கண்களை மறைக்காமல் கண்பாகத்தைத் தவிர்த்துத் திருமண் இட்டால் எவ்விதமாக இருக்குமோ அவ்விதமானது நெ. 2 உருவத்தில் காட்டப்பட்டிருக்கிறது. திருமண்காப்பில் விரல் விரலாகத் தெரியக் கூடாதென்றும் ஸுபரிஷ்க்ருதமாக இருக்க வேண்டுமென்றும் சாஸ்திரமாதலால் அப்படிப்பட்ட ஸுபரிஷ்க்ருதமான விதம் நெ. 3 உருவத்தில் காட்டப்பட்டிருக்கிறது. வயிறு, மார்பு, கை முதலான அவயவங்களில் இடும்போது கண்களை மறைப்பதென்கிற வார்த்தைக்கு ப்ரஸக்தியில்லாமையால் நெற்றி










இவற்றைப்பற்றின விவரணம் முன்னே 49-ஆம் பக்கத்தில் 67 பாராவில் காண்க.

யில் தேறுகிற திருமண்காப்பின் ஆகாரத்திற் காட்டிலும் உடம்பி லணியும் திருமண்காப்புகளின் ஆகாரத்திற்கு வேறுபாடு அமை கின்றதென்று கண்டுகொள்வது. ப்ராகாரம் கோபுரம் முதலான விடங்களில் கண்மறைவுக்கு ப்ரஸக்தி இல்லையானாலும், "முகத்தி லுள்ளதுவே முக்கியம்" என்கிற ப்ரஸித்தியாலே முகத்திலணியும் ஆகாரமே ப்ராகார கோபுராதிகளில் ப்ராப்தமாகின்றது:

68. பராசர ஸம்ஹிதையில் *நாஸாதெள த்வ்யங்குலம் பாதம்* என்கிற வசனம் ஸ்பஷ்டமாகக் காண்கையாலே அதை யநுஸரித்து மூக்கில் இரண்டு பாகம் பாதம் அமைத்து அணிவதும் பொருந்தும். பாதமென்று காலுக்குப் பெயராதலால் நெற்றியில் இடு கிறகால்களைப் பாதமென்னலாமே தவிர, மூக்கில் இழுக்கிறதைப் பாதமென்பது கூடுமோ வென்று சிலர் சங்கிப்பர்கள். *ஏகாங்குலம் புண்ட்ர தரோஸ் து மூலம்* என்கிற உபநிஷத்தின்படி ஊர்த்வ புண்ட்ரத்தை ஒரு வ்ருக்ஷமாகச் சொல்லி யிருக்கையாலே வ்ருக்ஷத் தின் மூலத்தைப் பாதமென்று வ்யவஹரிப்பதுண்டென்பதை *ந்யக்ரோதோ பஹுபாத் வட:* என்கிற அமரகோசத்தினாலும் தெரிந்து கொள்ளலாமாகையாலே மூக்கிலிழுப்பதைப் பாதமென்று வ்யவஹரிப்பது மிகவும் பொருந்தும்.

69. பக்கம் 52ல் நெ. 4, நெ. 5 என்று லக்கமிட்டுக் காட்டப்பட்டுள்ள திருமண்காப்பு ஸன்னிவேசங்களைப் பற்றித் தெரிந்து கொள்ளவேண்டிய விஷயமாவது :—*குண்டலீக்ருத ஸர்ப்பஸ்த ஹரிபாத த்வயாக்ருதிம்* என்கிற ப்ரமாணத்திற்கு "ஸர்ப்பத்தில் காணப்படுகிற ஹரிபாதம் போலே திருமண் இட வேண்டும்" என்றுசிலர் சொல்லுகிற பொருள் பொருந்துவதற்கு வழியில்லை ; ஏனென்றால், இப்பொருள் விவக்ஷிதமாகில் ஸர்ப்பத் திற்குக் "குண்டலீக்ருத" என்று விசேஷணமிட்டிருப்பது விபல மாகும். ஆகவே அது பொருளன்று. நாஸிகாமூலத்திலே குண்ட லீக்ருத ஸர்ப்பாகாரமாகத் திருமணிட்டு அதன்மேலே இரண்டு ஹரி பாதங்கள் இருப்பதாகத் திருமண் இட வேணுமென்பதே யதார்த்த மானபொருள். இதிலும் கண்களில் மறைவு ஏற்படாதபடி யிடக் கூடிய ஆகாரம் நெ. 4 என்று அறிக. உடம்பில் கண் உபரோத மில்லாமையாலே ஸர்ப்பத்தின் குண்டலீகரணம் அஸங்குசித மாகிறது. அந்த ஆகாரமே நெ. 5.



இதைப்பற்றி 51-ஆம் பக்கத்தில் 69 பாராவில் காண்க.



இவ்விரண்டையும்பற்றி பக்கம் 53, பாரா 70 காண்க.

70. பக்கம் 52ல் நெ. 6, நெ. 7 என்று லக்க மிட்டுக் காட்டப்பட்டுள்ள திருமண்காப்பு ஸன்னிவேசங்களைப் பற்றித் தெரிந்துகொள்ள வேண்டிய விஷயமாவது :—*உத்புல்ல கமலஸ்தாயி ஹரிபாத த்வயாக்ருதிம்* என்கிற ப்ரமாணப்படிக்கு நாஸிகா மூலத்தில் தாமரை மலர் இருப்பதாக வைத்து அதன்மேலே இரண்டு ஹரிபாதங்களாகத் திருமணிடுகிற ஆகாரம் நெ. 6 என்று அறிவது. *அஷ்டமீந்து கலாதார ஹரிபாத த்வயாக்ருதிம்* என்கிற ப்ரமாணப்படிக்கு அஷ்டமீ சந்திரனை ஆகாரமாக்கி அதன்மேல் இரண்டு ஹரிபாதங்களாகத் திருமணிடுகிற ஆகாரம் நெ. 7, என்று அறிக. சண்டமாருதம் தொட்டயாசாரியர்பணித்த பரிகரவிஜயம் முதலான ப்ராமாணிகக்ரந்தங்களில், மேலேகுறித்த ப்ரமாணங்களும் மற்றும்பல ப்ரமாணங்களுமுள்ளன. அவற்றின்படி தேறுகிற ஆகாரங்களையே இந்நூலில் அச்சிட்டுக் காட்டியிருக்கிறோம். இத்தகைய சாஸ்த்ரப்ரக்ரியை எப்படியாவது இருக்கட்டும். ஸ்ரீரங்கத்தில் ப்ராகார கோபுரமண்டபாதிகள் திருமங்கையாழ்வார் நிர்மாணம் செய்வித்தவை. இதை யாரும் மறுக்க வொண்ணாதபடி பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் *ஜிதபாஹ்ய ஜிநாதிமணிப்ரதிமா அபி வைதிகயந்நிவ ரங்கபுரே, மணிமண்டப வப்ரகணாந் விததே பரகாலகவி:* என்று சிலாசாஸநம்போன்ற ச்லோகமிட்டருளி யிருக்கிறார். அப்படிப்பட்ட ப்ராகார கோபுரமண்டபங்களிலும், மற்றும் ராய கோபுரமென்று வழங்கப்படுகிறவற்றிலும் ஆயிரம் வருஷங்களுக்கு மேற்பட்டவையென்று ஒவ்வொருவரும் மதிக்கக்கூடிய திருமண்காப்புகள் திகழ்கின்றன.

71. காரைக் கட்டிடமாக இருப்பவற்றை விட்டுவிடுவோம். கருங்கல் கம்பங்களிலும் கருங்கல் உத்திரங்களிலும் பள்ளமாகச் செதுக்கப்படாமல் மேடாகத் திருப்பணி செய்யப்பட்ட திருமண்காப்புகள் பலபல திகழ்வதைக் காணலாம். முராரிநாடகத்தில் (அநர்க்கராகவத்தில்) *व्यामग्राह्यस्तम्भै:— வ்யாமக்ராஹ்ய ஸ்தம்பை:* என்று சொல்லப்படுவது போல் வ்யாமக்ராஹ்ய மென்னவுமொண்ணாதபடி மிகமிக ஸ்தூலங்களாயிருக்கிற தூண்களில் பள்ளமாகவல்லாமல் மேடாகக் காணப்படும் திருமண்காப்புகளைக் கண்டால் அந்தத் தூண்கள் திருப்பணி செய்யும்போதே இத்திருமண்கா

னும் அமைந்தவையென்று யாவரும் இசைந்தே தீரவேண்டியிருக்கிறது. இப்படி ஸ்ரீரங்கத்தில் மாத்திரமல்ல. திருவனந்தசயனம், ஸ்ரீஜகன்னாதம், ஸ்ரீ கூர்மம், ஸிம்ஹாசலம் முதலான பலவிடங்களிலும் அற்புதமாகக் காண்கிறோம். இவற்றால், நம் பூர்வாசாரியர்கள் யாவரும் ஒரேவிதமான திருமண்காப்பைத்தான் ஆதரித்து வந்தார்கள் என்பது பிரதிபக்ஷிகளாலும் நிஷ்பக்ஷபாதமாக இசையவேண்டியதாகிறது. கி. பி. பத்தொன்பதாவது நூற்றாண்டில் வடகலையாக்கப்பட்ட சில கோவில்களிலுங்கூட புராதனமான சிலாமயங்களான தென்கலைத்திருமண்காப்புகள் இன்னமும் அழிக்க முடியாமல் பலவுள்ளன. இதைப்பற்றி இவ்வளவில் நிற்போமிப்போது.

## —இனி ஸம்ப்ரதாயார்த்த விசாரம்—

72. கீழே, வடகலை வகுப்பினர்கள் வேதாந்த தேசிகனுடைய திவ்யஸூக்திகளுக்குமாறான அர்த்தங்களையே பெரும்பாலும் தங்களுடைய கொள்கையாகச் சொல்லி வருவதாலும் இவர்கள் தேசிகனோடு உறவு கொண்டாடுவதற்கு நியாயமில்லை யென்று தெரிவித்திருக்கிறோம். இதைப் பற்றின நிருபணமே இந்நூலில் பாக்கிநிற்கிறது. இவ்விஷயத்தைப்பற்றி நம்முடைய பலநூல்களில் வெகுவிரிவாக எழுதியிருக்கிறோம். அவை மிகவும் பிராமாணிகமானவை யென்று உலகம் போற்ற நிற்கின்றன. ஆகவே இங்குநாம் அதைப்பற்றி விரிவாக எழுதவேண்டாம். ஸாரமாகத் தெரிவித்து நிற்கிறோம்.

73. (1) பகவத்கிருபை நிர்ஹேதுகமென்று தென்னாசார்யர்களின் கொள்கை. அது ஸஹேதுக மென்று வடகலையார் கொள்கை. தேசிகனுடைய கொள்கை எது வென்று பார்ப்போம். அவர் பரமபத ஸோபாநமென்னும் ரஹஸ்யத்தில் — "அஜ்ஞாத யாத்ருச்சிக ஆநுஷங்கிக ப்ராஸங்கிக ஸாமாந்யபுத்திமூல ஸுக்ருத விசேஷங்களை வ்யாஜமாகக் கொண்டு விசேஷகடாக்ஷம் பண்ணி" என்கிறார். அன்றியும், திருவாய்மொழியில் முதற்பத்தில் பத்தாம் பதிகத்தில் எம்பெருமானுடைய நிர்ஹேதுக கருணையை ஆழ்வார் அநுபவித்து ஈடுபடுவதாகத் தெனாசாரியர்கள் வியாக்கியானம் செய்தார்கள்; தேசிகனும் அவ்விடத்திற்கு * அவ்யாஜோதாரபாவாத்* என்றே ச்லோகமிட்டார்.

74. (2) ப்ரபத்தி உபாயமன்றென்று தென்னாசாரியர்களின் கொள்கை. அது உபாயந்தானென்று வடகலையாருடைய கொள்கை. தேசிகன், உபாயமன்றென்கிற கொள்கையையே தாம் கொண்டார். ந்யாய ஸித்தாஞ்ஜநத்தில்*इयं केवललक्ष्मीशोपायत्वप्रत्ययात्मिका । स्वहेतुत्वधियं रुन्धे किं पुनस्सहकारि-

रिणाम्—இயம் கேவல லக்ஷ்மீசோபாயத்வப்ரத்யயாத்மிகா, ஸ்வஹேதுத்வ தியம் ருந்தே கிம்புநஸ் ஸஹகாரிணும் * என்றூர். ரஹஸ்யத்ரயஸாரத்தில் * निदानं तत्रापि स्वयमखिलनिर्माणनिपुण:—நிதாநம் தத்ராபி ஸ்வயமகில நிர்மாண நிபுண:* என்றும் *स्वप्राप्तौ स्वयमेव साधनतया जोघुष्यमाण: श्रुतौ* (ஸ்வப்ராப்தௌ ஸ்வய மேவ ஸாதநதயா ஜோகுஷ்யமாண: ச்ருதௌ)என்றும் பணித்தார்.

75. (3) சேதநலாபம் ஈச்வரனுக்குப் பேறு—என்பது தென்னுசார்யருடைய கொள்கை. ஈச்வரலாபம் சேதநனுக்குப் பேறு என்பது வடகலை யாருடைய கொள்கை. தேசிகன் கீதாபாஷ்ய—தாத்பர்ய சந்த்ரிகையில் (*மந்மநா பவ மத்பக்த:*என்றவிடத்து) "आश्रितसंरक्षणं स्वलाभं मत्वा प्रवर्तते—ஆச்ரிதஸம்ரக்ஷணம் ஸ்வலாபம் மத்வா ப்ரவர்த்ததே" என்றருளிச் செய் திருக்கையாலே தென்னுசார்யர்களுடைய கொள்கையே அவருடைய தென்று நிஷ்கர்ஷிக்கவெளிது.

76. (4) பரகதஸ்வீகாரமே ரக்ஷகமென்பது தென்னுசார்யருடைய கொள்கை. வடகலையார் ஸ்வகதஸ்வீகாரமே ரக்ஷகமென்பதோடு கூட பரகதஸ்வீகாரமென்று வாயாற் சொல்லுவதே அஸம்பத்தமென்கிறூர்கள். கீதையில் (8. 14.)* அநந்ய சேதாஸ் ஸததம் யோ மாம் ஸ்மரதி நித்யச:, தஸ்யாஹம் ஸுலப: பார்த்த * என்றவிடத்தில் "तद्वियोगमसहमान: अहमेव तं वृणे ; मत्प्राप्त्यनुगुणोपासनविपाकम् तद्विरोधिनिरसनम् अत्यर्थमप्रियत्वादिकं च अहमेव ददामी-त्यर्थ: ; * यमेवैष वृणुते तेन लभ्य इति हि श्रूयते" என்கிறகீதாபாஷ்யஸூக்தியின் கீழ் தாத்பர்ய சந்த்ரிகையில் "उक्तस्य अतिवादमात्रत्वशङ्काव्युदासाय श्रुतिमूक्तामाह—यमेवेति" என்றூர் தேசிகன். *நாயமாத்மாச்ருதியானது பரகத ஸ்வீகா ரத்திற்கு ப்ரமாணமென்று பாஷ்யகாரர் திருவுள்ளம் பற்றினதை தேசிகன் ஸுப்ரதிஷ்டிதமாக்கிவைத்தபடியாலே வடகலையார்களுடைய பேச்சு தேசிகஸூக்தி விருத்தமென்று முடிந்தது.

77. (5) ப்ரபத்தி அபராத கோடிப்ரவிஷ்டை யென்று தென்னுசார் யருடைய கொள்கை. இப்படிச் சொல்லுவது மிகவும் தவறு என்கிறூர் கள் வடகலையார்கள். தேசிகன் சரணுகதி தீபிகையில் * त्वत्किङ्करत्वविभवे स्पृहयाऽपराध्यन् * என்று, கைங்கரிய ப்ரார்த்தநைக்குப் பூர்வபாவியான கைங்கர்ய ருசியையுங் கூட அபராத கோடியிலே வைத்துப் பேசியிருக்கை யாலே தென்னுசார்யருடைய கொள்கையே அவருடைய கொள்கையாகும்.

78. (6) உபாயாந்தரங்கள் [—கர்மஜ்ஞாந பக்திகள்] ஸ்வரூப விருத் தங்களாகையாலே த்யாஜ்யங்களென்று தென்கலையாருடைய கொள்கை.

அவற்றை ஸ்வரூப விருத்தமென்னக் கூடாதென்கிருர்கள் வடகலை வகுப்பினர். தேசிகனுேவென்னில், ந்யாஸதிலகத்தில் * ஆர்த்யேஷு ஆர்த்தேஷ்வாசுபலா * என்கிற ச்லோகத்தில் ப்ரபத்திக்கு ஐந்துவிசேஷணங்களிட்டிருக்கிருர். ஒவ்வொருவிசேஷணமும் உபாயாந்தரவ்யாவர்த்தகமாகவே யிடப்பட்டிருக்கிறது. அதில் *ஸ்ரீரங்கேச்வர! யாவதாத்மபியதத்வத் பாரதந்த்ர்யோசிதா * என்கிற விசேஷணத்திஞல் - யாவதாத்மபியதமான அத்யந்த பாரதந்த்ரியத்திற்கு ப்ரபத்தி உசிதமாயிருக்குமென்றபோதே ப்ரபத்திக்கு ப்ரதிகோடியானது அந்த பாரதந்த்ரியத்திற்கு விருத்தமாயிருக்கு மென்னுமிடம் ஸ்பஷ்டமாகத் தேறுகிறபடியால் தேசிகன் திருவுள்ளம் உபாயாந்தரம் ஸ்வரூபவிருத்தமென்பதே. அடைக்கலப்பத்திலும் தொடங்கும் போதே * பத்திமுதலாமவற்றில் பதியெனக்குக் கூடாமல்* என்ருர். ஏன் கூடவில்லை? பாரதந்திரியத்திற்கு விருத்தமாகையாலே கூடவில்லை. அஜ்ஞாந அசக்திகளாலே என்னப்போகாதே.

79. (7) பிராட்டிக்குப் புருஷகாரத்வமேயுள்ளது, உபாயத்வமுள்ளது எம்பெருமானுக்கு— (அதாவது) மோக்ஷத்தையளிப்பது எம்பெருமானே; அதையளிக்கும்படி புருஷகாரக்ருத்யம் செய்வது மாத்திரமே பிராட்டிக்குள்ளது—என்பர் தென்கலையார். பிராட்டிக்குப் புருஷகாரத்வம் போலவே உபாயத்வமுமுண்டென்கிருர்கள் வடகலையார். இக்கொள்கையை தேசிகன்சிறிதும் ஸஹிப்பவரல்லர். நூற்றுக்கணக்கான ஸ்ரீஸூக்திகளால் பிராட்டிக்குப் புருஷகாரத்வமொன்றையே ஸ்தாபிக்கிருர்தேசிகன். இங்கு ஒன்றேயெடுத்துக்காட்டுவோம். ரஹஸ்யரத்நாவளியிலே "ஸ்ரீமானன நாராயணனொருவனுமே ஸர்வஜீவர்களுக்கும் தஞ்சம். ஸர்வஸ்வாமிநியாய் ஸர்வேச்வரனுக்கு சேஷமாய் ஸஹதர்மசாரிணியான பெரியபிராட்டியார் இத்தலையில் வாத்ஸல்யாதிசயத்தாலும் அத்தலையில்வால்லப்யாதிசயத்தாலும் புருஷகாரமாய்க்கொண்டு இஜ்ஜீவர்களுக்குத் தஞ்சமாகிருள்" என்பது தேசிகஸூக்தி. ரஹஸ்யரத்நாவளீஹ்ருதயமென்கிற அடுத்த ரஹஸ்யத்திலே இதன்பொருளைத் தாமே விவரித்திருக்கிருர். ஆகவே இவ்விஷயத்திலும் தேசிகன் திருவுள்ளத்திற்கு விருத்தமாகவே வாதிப்பவர்கள் வடகலைவகுப்பினர்.

80. (8) ஆசார்யன் ஸந்நிதியிலே நாம் பஞ்சஸம்ஸ்காரம் பெறும் போது அவர்நமக்கு த்வயமென்னும் மந்த்ரரத்நத்தை உபதேசிக்க அதை நாம் அநூச்சாரணம் பண்ணுகிருேம்; இதனுல் நமக்கு ப்ரபத்த்யநுஷ்டாநமாகிறது; தனிப்பட ஓரநுஷ்டானம் வேண்டா வென்பது தென்கலையாருடைய கொள்கை. அந்த த்வயோச்சாரணுநூச்சாரணம் அகிஞ்சித்கரம், தனிப்பட அத்ருஷ்டார்த்தமென்று செய்துகொள்ளவே வேண்டுமென்கிருர்கள் பிறவகுப்பினர். தேசிகனுேவென்னில் ரஹஸ்யத்ரய ஸாரத்தில் க்ருதக்ருத்யாதிகாரத்தில் "பகவத் க்ருபையடியாக வுண்டான

ஸதாசார்ய கடாக்ஷ விஷயீகாரத்தாலே வந்த த்வயோச்சாரண அநுச்சாரணத்தாலே ப்ரபத்தியநுஷ்டானம் பிறந்தபின்பு சரண்யப்ரஸாதநங்களில் இதுக்குமேல் ஒன்றில்லாமையாலே ” என்று ஸுஸ்பஷ்டமாய் இதரவ்யவச்சேத பூர்வகமாக அருளிச் செய்திருக்கிறார். ஆகவே இதிலும் வடகலை வகுப்பார் தேசிகஸூக்திக்கு நேர்விருத்தமாகவே செய்து வருகிறார்கள்.

81. (9) எம்பெருமானுடைய வ்யாப்தியைச் சொல்லும்போது அவனுக்கு ப்ரதிவஸ்து பூர்ணத்வத்தை [அதாவது, வஸ்து தோறும் பரிஸமாப்ய வர்த்தமாநத்வத்தை]ச் சொல்லுகிறார்கள் தென்னாசார்யர். அது அஸம்பாவித மென்கிறார்கள் பிறவகுப்பினர். தேசிகனோ வென்னில் ந்யாயஸித்தாஞ்ஜநத்தில் இவ்விசாரத்தை விரிவாகச் செய்து கொண்டு போய் “ अतो यथागमं सर्वत्र पूर्ण एव भगवान् ” என்று முடித்தார். * शब्दैकप्रमाणकत्वेन सकलेतरवस्तुविसजातीयत्वादस्यार्थस्य विचित्रशक्तियोगो न विरुध्यते * என்கிற ஸ்ரீபாஷ்யகார ஸூக்தியையே தஞ்சமாகக் கொண்டு ‘ यथागमम् ’ என்று சொல்லி நிஷ்கர்ஷித்திருக்கிறார். ஆகவே இதிலும் பிறர் தேசிகவிரோதிகள்.

82. (10) சிறந்த பகவத் பக்தர்களின் பெருமையைச் சொல்லி வருமிடத்து ஜாதி போய்விடு மென்கிறார்கள் தென்கலையார்; ஜாதி ஒருகாலும் மாறாது, அது ஆகமாபாயியன்று என்கிறார்கள் வடகலையார். தேசிகன் *நமஸ் தஸ்மை கஸ்மைசந பவது * (அபயப்ரதாநஸாரே) இத்யாதிச்லோகத்தில் “ सुराधीशस्वैरक्षणकुपितशापायुधवधूदृषत्त्वादुर्जातप्रशमनपदाम्भोजरजसे — ஸுராதீசஸ்வைரக்ஷணகுபிதசாபாயுதவதூத்ருஷத்தாதுர்ஜாதப்ரசமநபதாம்போஜரஜஸே ” என்கிற வசநவ்யக்தியாலும், “ शिलादेः स्त्रीत्वादिः — சிலாதே: ஸ்த்ரீத்வாதி: ” இத்யாதியாலும் ஜாதி ஆகமாபாயி யென்பதை ஸ்பஷ்டமாகத் தெரிவித்திருக்கிறபடியாலே இதிலும் பிறர் தேசிகவிரோதிகளே.

83. (11) எம்பெருமானுடைய திருக்குணங்களில் சிறந்ததாகக் கொண்டாடப்படுகிற தயையாவது பரது:க்க துக்கித்வ ரூபம் என்று ஸ்ரீபாஷ்யச்ருதப்ரகாசிகாதிகளில் தேறுகின்ற பொருளைக் கொள்பவர்கள் தென்னாசார்யர்கள். அகில ஹேயப்ரத்யநீக கல்யாணைகதாநனான பகவானிடத்தில் துக்கித்வரூபமான ஹேயகுணத்தைச் சொல்லுவது அபசாரமென்பர் வடகலையார். வேதாந்ததேசிகனோவென்னில் (தயாசதகத்தில்) அந்த தயாகுணந்தன்னையே விளித்து * अचिद्विशिष्टान् प्रलये जन्तूनवलोक्य जातनिर्वेदा-त्वम् * அசிதவிசிஷ்டாந் ப்ரலயே ஜந்தூநவலோக்ய ஜாதநிர்வேதா-த்வம் ” என்று சொல்லித் தென்னாசார்யர்களின் கொள்கையையே தமது கொள்கையாக ஸ்பஷ்டீகரித்தருளினார். இதைப்பற்றி அபிநவதயாசதக மென்று வடமொழியில் விரிவான நூல் உரையோடும் வெளியிட்டிருக்கிறோம்.

84. (12) தயையைக்காட்டிலும் மிகச்சிறந்ததான பகவத்குணம் வாத்ஸல்ய மென்பது; அது 'தோஷேபிகுணத்வபுத்தி' ரூபமானதென்று ச்ருதப்ரகாசிகையில் நிர்ணயித்தபடி கொள்பவர் தென்னுசார்யர்கள். தோஷேபி குணத்வபுத்தி யுண்டானுல் அது அந்யதாஜ்ஞான மாகுமே யொழிய ஸத்குணமாகா தென்பர் வடகலையார். இதுவும் அபயப்ரதாந ஸாரத்தில் *தோஷோ யத்யபி தஸ்ய ஸ்யாத்* என்றதற்கு தேசிகன் ஸாதிக் கிற தத்வார்த்தத்திற்கு விருத்த மென்பதைத் தமிழுரையோடுங் கூடின வாத்ஸல்யார்த்த ப்ரகாசிகையிலே விரிவாக வுரைத்தோம் கண்டுகொள்க.

85. (13) பகவத்ஸந்நிதி முதலானவிடங்களில் நமஸ்காரத்தை ஸக்ருதாவ்ருத்தி செய்வது தென்னுசாரியர்களின் ஸம்பிரதாயம். எம்பெரு மானுரருளிச் செய்த நித்ய க்ரந்தத்தில்— * आराधनाभिमुखो भवेति मूलमन्त्रेण प्रार्थ्य मूलमन्त्रेण दण्डवत्प्रणम्य उत्थाय स्वागतं निवेद्य यावदाराधनसमाप्ति सान्निध्ययाचनं कुर्यात् * என்றருளிச் செய்தவிடத்தில் "தண்டவத் ப்ரணம்ய உத்தாய" என்றதற்குப் பொருந்தின அனுஷ்டானம் இதுவே. வேதாந்ததேசிகனும் ஸ்தோத்ர பாஷ்யத்தில் (21) * நமோ நமோ வாங்மநஸாதிபூமயே * என்ற விடத்தில் * प्रशंसायां प्रतिज्ञायां प्रलापे तर्जनेऽपि च। भये च विजये चैव पौनःपुन्यमलंकृतिः ॥ * என்கிற வொருச்லோகத்தையெடுத்துக்காட்டியுள்ளார். ஸ்தோத்ரம்செய்தல் ப்ரதிஜ்ஞை செய்தல் அழுதல் வெருட்டுதல் அச்சந்தோற்றச் சொல்லுதல் வெற்றி தோற்றச் சொல்லுதல் முதலிய ஸந்தர்ப்பங்களில் ஒரு சொல்லையே அடுத்தடுத்துச் சொல்லுவதானது ஒருவகையான அலங்காரமாகும் என்பது இந்தச்லோகத்தின் பொருள். உலகத்தில் இதை நாம் நன்ருகக் காணுகி ரோம். 'பாம்பு பாம்பு பாம்பு' என்று பலமுறை சொன்னுலும் உள்ளது ஒரு பாம்பேயல்லது பலபாம்புகள் வந்துவிடமாட்டாவே. அப்படியே 'நமோ நம:, தொழுது தொழுது' என்று எத்தனை பர்யாயம் சொன்ன லும் அலங்காரமேயாகு மத்தனையென்று தேசிகன் ஸ்பஷ்டமாக அருளிச் செய்திருக்க இதற்கிணங்கின அனுஷ்டானமில்லை பிறரிடத்தில்.

86. இப்படியாக அர்த்தங்களிலும் அநுஷ்டானங்களிலும் தேசிகன் தென்னுசார்யர்களோ டொத்தவரென்றும், வடகலைவகுப்பினர் தனிப்பட் டவர்களென்றும் நிரூபித்தோமானேம். இப்படி யிருக்க இவர்கள் தேசிக னேடு புதிதாக உறவு கொண்டாட ஆரம்பித்தது கோவில் சண்டைகளுக் காகவே யென்பதையும், அந்த சண்டை அநீதியானதென்று ஒவ்வொரு விவகாரத்திலும் முடிந்திருக்கிறதென்பதையும் நன்ருக கவனித்து இனிமே லாவது இந்த வீண்சண்டை வளராமல் அடங்கிப்போக வழிதேடுவது நலம் என்று ஹிதமாகச் சொல்லி நிறுத்துகிறேம். ... .... *

ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர் எழுதிய
ராமானுஜ தயாபாத்ரபத்ய சரித்திரம் முற்றுப்பெற்றது.

# விசேஷ அறிவிப்பு.

---

இந்நூலின் அநுபந்தமாகச் சில நியாயாலய ஜட்ஜ்மெண்டுகள் பிரசுரிக்கப்படுமென்று இப்புத்தகத்தில் வெளியிட்டிருக்கிறோம். அவ்விதமாகவே ஸ்ரீமான் உவே. V. N. வெங்கடவரதாசாரியர் (அட்வொகேட்) அவர்களால், ஸ்ரீரங்கம், காஞ்சீபுரம், திருமலை திருப்பதி, திருப்புட்குழி, திருச்சேறை, திருக்கண்ணமங்கை, நாகபட்டணம், திருவுள்ளூர், ஸ்ரீபெரும்பூதூர் முதலான திவ்யதேசங்களில் தோன்றின விவாதங்களின் மேல் ஹைகோர்ட்டு வரையிலும் பார்லிமெண்டு வரையிலும் முடிந்திருக்கிற தீர்ப்புகளிலிருந்து ஸாரமான பலபல விஷயங்கள் தொகுக்கப்பட்டு, அவை தமிழ்மொழி பெயர்ப்புடனும் ஸித்தப்படுத்தப் பட்டிருக்கின்றன. அவை தனிப்புத்தகமாக வெளிவரும்.

திருவுள்ளூர் தேவஸ்தான ஸம்பந்தமாகப் பல ரிகார்டுகள் தமிழ்ப் பாஷையிலேயே தோன்றியவை ஏற்கெனவே அச்சிட்டு வெளியிடப்பட்டிருக்கின்றன. அந்த திவ்யதேசத்தில் ஸ்ரீமத் அஹோபிலம் ஜீயர்ஸ்வாமிகள் அநாதிகாலமாக ஸ்ரீசைலேச தயாபாத்ரத் தனியனையே சொல்லி வந்தார்களென்றும், அதைவிட்டு வேறு பாத்திரத்தனியன் சொல்லத் தொடங்கினது முதல் அவர்களுக்குப் பல கஷ்டங்கள் ஏற்பட்டனவென்றும் அந்த ரிகார்டுகளால் ஸ்பஷ்டமாக விளங்கும். இதைப்பற்றி ஷ மடத்தார்கள் என்ன பதில் எழுதினார்களென்றால், 'முன்னேயிருந்த நிலைமை வாஸ்தவந்தான்; அது இப்போது அறவே மாறி விட்டபடியால் பழைய கதைகளை இப்போதெடுத்துக் காட்டுவதனால் என்ன லாபம்?' என்று எழுதினார்கள். ஆங்காங்கு தேவாலயங்களின் பழைய பரிஸ்திதி எப்படிப்பட்டதென்பதை விளக்குவதற்குத்தானே நாம் ரிகார்டுகளை யுதாஹரிப்பது. நமது நூல்களுக்கு அதுதான் முக்கியமான நோக்கமென்பதையும் இப்போதைய கோவில் ஸ்திதிகளை மாற்றுவதில் நோக்கமில்லையென்பதையும் ப்ராமாணிகர்கள் அறிவார்களாக.

இங்ஙனம்:

**P. B. அண்ணங்கராசாரியர்.**

---